# மின்னுவதெல்லாம்...



அகிலன்

விற்பனை உரிமை:

**பாரி புத்தகப் பண்ணை**

576, பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5

# மின்னுவதெல்லாம்...

மனோரமாவின் வருகையால் கல்யாணி வீட்டு வெளி வாசலில் டாலடித்தது. மனோரமா உடுத்திருந்த சேலைத் தலைப்பின் சரிகை ஒளி சுவரில் பளிச்சென்று பிரதிபலிக்கவே, கைவேலையாக இருந்த கல்யாணி முகத்தைத் தூக்கி யாரென்று பார்த்தாள். மனோரமாவின் எழிலுருவம் உள்ளே ஒயிலோடு நுழைந்துகொண்டிருந்தது.

"என்ன கல்யாணி, எப்போது பார்த்தாலும் வேலை தானா? பார்வதி எங்கே?"

"இரண்டு நாளாய் அவளுக்கு உடம்புக்கு வந்துவிட்டது. பாவம், குழந்தைகுட்டிக்காரி!"

"வேலைக்காரியிடம் இப்படி விட்டுக்கொடுக்கலாமோ? நமக்கு மாத்திரம் குழந்தைகுட்டி இல்லையா? உன்னைப் போல மாடாய் உழைத்து ஓடாய்த் தேய என்னால் ஆகாதம்மா!"

கையில் இருந்த வெண்கலத் தம்ளரைக் கல்யாணி தேய்த்து அலம்பிக்கொண்டிருந்தாள். சுற்றிலும் சமையல் செய்த பாத்திரம் பண்டங்கள் பற்றுப் போகாமல் கிடந்தன. அவைகளைக் கல்யாணி தண்ணீரில் ஊறப்போட்டிருந்தாள். மனோரமாவுக்கு இந்த நிலையைக் கண்டபிறகு, தான் வந்த காரியம் ஆகாதென்று தெரிந்துவிட்டது.

கல்யாணியின் தலைமயிர் ஒழுங்கில்லாமல் பரந்து கிடந்தது. நெற்றியில் ஒரு கற்றை மயிர் தொங்கும்படி பெயருக்கு ஏதோ வாரி முடிந்திருந்தாள். தலைப்பு இடுப்பில் செருகப்பட்டு, சேலை முழங்காலை ஒட்டித் திரண்டிருந்தது. நெற்றிக் குங்குமம் வேர்வையால் ஒழுகியது. இந்தத் தோற்றத்தில் மனோரமாவுக்குக் கல்யாணியைப் பார்க்

கவே அருவருப்பு. 'இன்னும் இவள் சீவி முடித்துச் சிங்காரிப்பதற்குள் பட்டணம் பறிபோய்விடுமே' என்ற எண்ணம்.

"அப்படியானல் நீ வரமுடியாதென்று சொல்."

"எங்கே அக்கா?"

"கடைவீதிக்குப் போய் ஏதாவது துணிமணி பார்க்கலாமென்று கிளம்பினேன். எல்லாம் புது ரகமாம்."

"எப்படி அக்கா வருவது? நீங்கள்தாம் பார்க்கிறீர்களே!"

"தினமுந்தான் பார்க்கிறேன். இந்தமாதிரி மனிதருக்கு உன்னைக் கொடுத்ததைவிடப் பாழுங் கிணற்றில் தள்ளியிருக்கலாம். பாவம்!"

மனோரமாவின் இந்த அநுதாப வார்த்தைகள் கல்யாணிக்குப் பிடிக்கவே இல்லை. வெறுப்போடு முகத்தை வைத்துக்கொண்டு பேசினள்: "போய் வருகிறீர்களா, அக்கா? கடைக்கு நேரமாகவில்லையா?"

"இதோ பார்; செக்குமாட்டுக்குத் தான் படுகிற கஷ்டம் எப்படித் தெரியும்? நீ அசல் செக்குமாடு; பத்தாம் பசலிப் பட்டிக்காடு! 'இண்டர்' படித்து என்ன பிரயோசனம்?"

கலகலவென்ற கேலிச் சிரிப்போடு வந்ததுபோலவே ஒயில் நடை நடந்து, ஒய்யாரக் கைவீசி, மனோரமா திரும்பினள். டாலடித்துச் சுவரில் மின்னிய எதிரொளியும் அவள் பின்னலேயே நகர்ந்து மறைந்தது.

கல்யாணி தலையைத் தூக்கி மனோரமாவின் பின்னழகைக் கவனித்தாள். வட்டமாகச் சுற்றிக் கட்டப்பட்ட சடைப்பின்னல் கனகாம்பரக் காடாக இருந்தது. கறுப்பு நிறத்தில் சரிகைக் கரை ஓடிய போலிப் பட்டு உடுத்திருந்தாள். மாம்பழ வர்ண நைலான் ஜாக்கெட். ஜாக்கெட்டின் வழியே அவள் போட்டுக்கொண்டிருந்த 'பாடிஸ்' நன்ருகத் தெரிந்தது. சேலைத் தலைப்புக் கொஞ்சங்கூட முதுகை மறைக்கவில்லை; தோள்பட்டையில் தனியே

ஒதுங்கிக் கச்சிதமாய்க் குஞ்சம்போல் தொங்கியது. ஜாக்கெட்டுக்கும் இடுப்புச் சேலைக்கும் மத்தியில் இரண்டங்குல இடைவெளியில் அவளுடைய முதுகு தெரிந்தது.

முப்பத்தைந்து வயசு மனோ இருபது வயசுக் குமரியாய்க் காட்சியளித்தாள். பாக்கியுள்ள பதினைந்து வருஷங்களும் பக்குவமாய் ஆடை அணிக்குள் பதுங்கியிருந்தன. தேகத்திலும் அதற்கேற்றாற்போல் நல்ல சதைப்பிடிப்பு; நல்ல வாளிப்பு; நல்ல உயரம்.

மனோரமாவுக்குப் பின்னாலேயே அந்தச் சரிகை ஒளி, வளையல் ஒலி, ஸெண்டின் நெடி எல்லாம் தேய்ந்து மறைந்த பின், கல்யாணி அவளைப்பற்றி நினைக்கத் தொடங்கினாள். பெருமூச்சு சீறிக்கொண்டு வந்தது. அவளைப்பற்றிக் கல்யாணிக்குத் தெரிந்தது கொஞ்சந்தான்; தெரியாதது எவ்வளவோ.

## 2

அடிக்கடி மனோரமா வீட்டைவிட்டு வெளியே போவாள். கணவனோடும் குழந்தைகளோடும் போவாள்; குழந்தைகளை விட்டுவிட்டுக் கணவனோடு மாத்திரம் போவாள்; கணவனையும் குழந்தைகளையும் விட்டுத் தனியாகவும் போவாள். அல்லது வேறு யாரேனும் தெரிந்த மனிதர்களுடன் போவதும் உண்டு. அவளுக்கு மூன்று குழந்தைகள்; அத்தனையும் பெண்கள். அவளுடைய கணவன் முத்துச்சாமிக்கு ஏதோ ஒரு கம்பெனியில் வெளியூர்களில் அலைகிற வேலை.

இதோ அவள் புறப்பட்டுவிட்டாள். முழுக்கைச் சட்டை, கழுத்துப்பட்டி, கால்சராய் முதலிய அலங்காரங்களுடன் துரைமகன் மாதிரி முத்துச்சாமி அருகில் செல்ல, மனோரமா மேடைக்குத் தயார் செய்துகொண்ட நடிகை போல அவன் தோளில் இடித்துக்கொண்டு நடக்கிறாள். அழகுப் பையும், வீசிய கைகளும், நிமிர்ந்த பார்வையுமாக அவளுடைய கம்பீரமான நடை சுற்றியிருப்பவர்களையெல்லாம் அவளைப் பார்க்கச் செய்கிறது. அவளுக்கு

அதில் ஒரு தனிப்பெருமை. குழந்தைகளை இப்போதெல்லாம் எங்கும் அவர்கள் கூட்டிக்கொண்டு போவதில்லை. ஆரம்பத்தில் கொஞ்சநாள் அவை அடம்பிடித்துவிட்டு, பிறகு ஒன்றும் பலிக்காமல்போகவே, 'சீசீ! இந்தப் பழம் புளிக்கும்' என்ற நரிக்கதையை ஞாபகப்படுத்தித் தங்கள் வால்களைச் சுருட்டிக்கொண்டன.

இந்தமாதிரிக் காட்சிகளைச் சன்னல் வழியாக நின்று பார்க்கும் கல்யாணிக்கு ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதமாகத் தோன்றும். தானும் கணவனும் குழந்தைகளுமே அப்படி உல்லாசமாக நடந்து செல்வதுபோல் ஓர் உணர்ச்சி. 'கொடுத்து வைத்தவள்' என்று மனோவைப் பற்றி நினைப்பாள். ஆனால் 'குழந்தைகளை வீட்டில் விட்டு இவர்களுக்கு என்ன வேடிக்கை வேண்டியிருக்கிறது?' என்று சிலசமயமும், 'அடிக்கடி வெளியே போய் அந்தரங்கத்தில் இருக்கவேண்டிய அன்புறவை அம்பலத்தில் காட்டத்தான் வேண்டுமோ?' என்று சிலசமயமும் அவளுக்குத் தோன்றுமல் போகாது. முடிவில் தன்னைத்தானே இப்படிச் சமாதானம் செய்துகொள்வாள்: 'பாவம்! அவள் புருஷனுக்கு வெளியூரில் அலைகிற வேலை. மாசம் பத்து நாள் தங்கியிருந்தால், அந்தப் பத்து நாளாவது அவர்கள் இஷ்டப்படி இருந்துவிட்டுப் போகட்டுமே! நமக்கு என்ன பொருமை இது?'

கல்யாணி ஆரம்பத்தில் மனோரமாவை நன்ருகப் படித்தவள், பணக்காரி, வாழ்க்கையை அநுபவிக்கத் தெரிந்த நாகரிகப் பைத்தியம் என்று தீர்மானித்திருந்தாள்.

மனோரமா வெகுநாள் வரையில் கல்யாணியுடன் நெருங்கிப் பழகவில்லை. தாழ்ந்த பிராணியை உதாசீனமாகப் பார்ப்பது போலவே கல்யாணியைப் பார்த்து வந்தாள். ஒருநாள் பேச்சின்போதுதான் கல்யாணி பணக்கார வீட்டுப் பெண் என்பதும், கல்லூரிப் படிப்புப் படித்தவள் என்பதும் அவளுக்குத் தெரிந்தன. திடீரென்று அக்கறை காட்டத் தொடங்கிவிட்டாள்.

"உன்னைப் பார்த்தால் காலேஜ் படியை மிதித்தவளாகவே தெரியவில்லையே?"

"தெரிந்து என்ன ஆகவேண்டும்? ஏதாவது வேலை கொடுக்கப்போகிறீர்களா? எனக்குக் கிடைக்கவேண்டிய உத்தியோகம் முன்பே கிடைத்துவிட்டதே!"

"என்னைப் பார்; ஸ்கூல் பைனல்தான் நான் படித்தது. ஆனால் எத்தனை பேர் என்னை பி. ஏ., எம். ஏ. என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள், தெரியுமா?"

"மற்றவர்கள் என்ன நினைத்தால் நமக்கென்ன அக்கா?"

"அதெல்லாம் அத்தை பாட்டி காலத்துக்குச் சரி. இன்றைக்கு வெளிவேஷந்தான் முக்கியம். உன் வீட்டுக்காரருக்கு என்ன சம்பளம்?'

"முந்நூறு "

"என்ன! நிஜந்தானா? இவ்வளவு சம்பளம் வாங்கியுமா உன் வீடு இப்படிக் கேவலமாக இருக்கிறது? உனக்கு ஒரு நல்ல புடவை, குழந்தைகளுக்கு நல்ல சட்டை உண்டா? எங்களுக்கு இருநூற்றைம்பதுதான். நாங்கள் அதைக்கொண்டு எப்படியிருக்கிறோம், பார்."

கல்யாணியின் முகம் சுருங்கியது. தங்களைவிடக் குறைந்த வருமானத்தில் அவர்கள் எப்படி இத்தனை ஆடம்பரமாய் வாழ முடிகிறது? அவள் பெருமூச்சு விட்டாள். மனோரமாவின் திறமையைக் கண்டு அவளுக்குப் பிரமிப்புத் தட்டியது.

தன் கணவன் வேணு வந்த பிறகு மெதுவாகக் கல்யாணி துணிமணிப் பேச்செடுத்தாள். வேணுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. "தாராளமாய்ப் போய் வாங்கிக்கொள். எது அவசியமான செலவோ அதைச் செய்" என்றான்.

கல்யாணிக்கும் ஆச்சரியந்தான். வேணுவிடம் அன்பும் உண்டு; ஆத்திரமும் உண்டு. எந்த நேரத்தில் எது வெளிப்படுமென்று தெரியாது.

மறுநாளே மனோரமாவை அழைத்துக்கொண்டு கல்யாணி கடைவீதிக்குச் சென்றாள். அங்கே போன பிறகுதான் மனோரமாவுக்குக் கடைவீதியில் எத்தனை பேரைத் தெரியும் என்பது கல்யாணிக்குத் தெரிந்தது. வழியில் பலருடன் நின்று நின்று பேசினாள். அவளுடைய எதிரில் சிரித்துக்கொண்டு பேசிய சிலர், அவளுக்குப் பின்னால் கேலி செய்து நகைத்ததையும் விகாரமாகப் பார்த்ததையும் கல்யாணி கவனித்தாள். மனோரமாவின் கண்பார்வையும் கூட்டத்தின் மத்தியில் சரியில்லை. சில பெண்களும் சரி, ஆண்களும் சரி, கூட்டத்தில் போகும்போது அடக்கமில்லாமல் கண்களை அலைய விடுவார்கள். மனோவின் கண்கள் அப்படி அலைந்தன.

பத்துக் கடைகளில் படியேறிய பிறகு ஒரு கடையில் வியாபாரம் நடந்தது. மனோரமா துணிகளைத் தேர்ந்தெடுத்தாள். எல்லாம் கண்ணைப் பறித்தன. உயர்ந்த ரகப் பட்டுப் போலவும், வாயில் போலவும், ஜார்ஜெட் போலவும் தோன்றின. கொள்ளை மலிவு. மின்னலைப் போல் பல்லைக் காட்டி முதல் வெள்ளையில் சாயம்போகும் மேல்மினுக்கு 'டூப்ளிகேட்' துணிகள்.

கல்யாணி தான் வாங்கிவந்த துணிகளை வேணுவிடம் பெருமையோடு காண்பித்தாள். மலிவான விலையில் பகட்டான பொருள்கள் வாங்கியதில் அவளுக்குத் திருப்தி. ஆனால் வேணுவுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. "கொண்டுபோய் நெருப்பில் போடு! ஐந்து நிமிஷம் கண்ணைப் பறித்தால் போதுமா? உழைக்கக் கூடியதாய்ப் பார்த்து எடுக்கத் தெரியாது?"

கல்யாணி பேசாதிருந்தாள். வேணு இன்னொரு மெல்லிய ஜாக்கெட் துணியைக் கையில் எடுத்தான். வெங்காயச் சருகைப்போல் லேசாகவும், கண்ணாடியால் நெய்ததுபோல் ஊடுருவுவதாகவும் இருந்தது. அவனுடைய கண்கள் சிவந்தன.

"இதென்ன கண்ணாடித் துணி? மானத்தை மறைப்பதற்குத் துணியா? திறந்து காட்டத் துணியா? இப்படி

யெல்லாம் போட்டுக்கொண்டு பெண்ணென்று வெளியே போக வெட்கமில்லே? இது தேவடியாள் வீடில்லே; குழந்தை வளர்க்கும் குடும்பம்!''

கல்யாணியின் கண்களில் நீர் நிறைந்தது.

"மனோரமாவும் நானுந்தான்....''

"இனி அந்த மானங்கெட்டவளோடு வெளியே போகாதே!''

## 3

அவளோடு மறுபடியும் வெளியில் போகவேண்டிய சந்தர்ப்பம் கல்யாணிக்கு ஒருமுறை ஏற்பட்டது. தவிர்க்கப் பார்த்தாள்; முடியவில்லே. மனோரமா கல்யாணியைக் கேலி செய்து, கட்டாயப்படுத்தி, ரோஷமூட்டித் தன்னுடன் இழுத்துச் சென்றாள். பழைய கதையேதான். கண்ட இடத்தில் நின்று, மரியாதை தெரிந்தவர்கள், தெரியாதவர்கள், அயோக்கியர்கள், நல்லவர்கள் என்ற பாகுபாடே கவனியாமல் பேசினாள். ஒரு தெருவின் திருப்பத்தில் இருவரும் வந்துகொண்டிருக்கும்போது, பின்புறமாய் வேகமாக வந்த கார் ஒன்று திடீரென்று அவள்மேல் உரசிக்கொண்டு நின்றது.

"ஹலோ! வர்ரிங்களா அம்மா? எங்கே போகணும், கொண்டுபோய் விட்றேன்.''

காரை ஓட்டிவந்த பேர்வழி வெளியில் கழுத்தை நீட்டி மனோரமாவுடன் பேசினான். அப்போது அவன் கல்யாணியைப் பார்த்த பார்வை அவளேக் கடித்துக் குதறுவது போலிருந்தது.

மனோரமாவுக்கு ஒரே குதூகலம். "வா கல்யாணி, காரில் போகலாம்'' என்று கதவைத் திறந்துகொண்டு ஏறப் போனாள்.

"வேண்டாம், அக்கா! நீங்கள் வேண்டுமானால் போங்கள். நான் நடந்து வருகிறேன்.''

மனோரமா கல்யாணியை விடவில்லை. கார்க்காரனும் பரிந்து பேசினான். கல்யாணி பிடிவாதமாக மறுத்து விடவே, மனோரமாவும் கீழே இறங்கவேண்டியதாயிற்று. ஏமாற்றத்துடன் கார் நகர்ந்தது.

அந்த மனிதனின் பெயரை மனோ சொல்லக் கேட்டுக் கல்யாணி திடுக்கிட்டாள். ஆளை நேரில் பார்த்ததில்லையே தவிரப் பெயர் பிரசித்தம். பிரமுகர் என்ற போர்வையில் உலவிய அயோக்கியர்களின் வரிசையில் அவனுக்கு முதல் வெற்றிலை பாக்கு!

அவர்கள் அன்று வீடு வந்து சேருவதற்கு அதிக நேரமாகிவிட்டது. வாசலில் வேணு நின்றுகொண்டிருந்த தோற்றத்தைக் கண்டவுடன் கல்யாணி நடுங்கிப்போனாள். மனோரமாவின் முகம் வேண்டுமென்றே வெறுப்போடு மறுபக்கம் திரும்பியது. ஏனோ எப்போதும் அவளுக்கு வேணுவைக் கண்டால் பிடிக்காது.

வீட்டிற்குள் கல்யாணி காலடி எடுத்து வைத்தவுடன் அவள் கன்னத்தில் பளீரென்று ஓர் அறை விட்டான் வேணு. மனோரம்மாவின் எதிரிலேயே இந்த அறை விழுந்தது. விரல்கள் அப்படியே அவளுடைய மிருதுவான கன்னத்தில் பதிந்தன. கலங்கிய கண்களுடன் கல்யாணி வாய் திறவாது உள்ளே போய்விட்டாள். தன் வீட்டிற்குச் சென்று மனோரமா வேண்டுமென்றே காறி உமிழ்வதை வேணு கவனித்தான்.

மறுநாள் வேணு காரியாலயத்துக்குப் போனபிறகு மனோரமா துக்கம் விசாரிக்க வந்தாள். கல்யாணியின் கன்னத்தைப் பரிவோடு பார்த்துவிட்டு, நன்றி கெட்ட ஆண்களின் உலகத்தை நாத் தழும்பேறத் திட்டித் தீர்த்தாள்.

"உன் புருஷனை மனிதரில் சேர்க்கலாமா? மிருகம்!"

"அவரை ஒன்றும் பேசாதீர்கள், அக்கா!"

"காட்டுமிராண்டியோடு நீ எப்படித்தான் குடித்தனம் செய்கிறாயோ? நானாக இருந்தால் இந்தக் கன்னத்தைக்

காட்டியே வழக்குத் தொடர்வேன். விவாக ரத்துக்கு இந்த ஒரு சாட்சி போதுமே!''

"விவாக ரத்தா?''

"ஏன்? இவளைவிட இங்கிதம் தெரிந்தவர்கள் இல்லையா? உலகம் ரொம்பவும் பெரியது கல்யாணி.''

"எனக்கு இந்த வீடு போதும். உங்களுடைய உலகம் வேண்டாம்.''

"உனக்கு மூளையே கிடையாது.''

கல்யாணிக்குப் பொறுக்கமுடியவில்லை. "உங்களுக்குத்தான் மூளையில்லை! வெட்கத்தை விட்டு விவாக ரத்தைப்பற்றிப் பேசலாமா? இப்போதே நாலு தங்கைகளைக் கல்யாணத்துக்கு வைத்துக்கொண்டு சீரழிகிறீர்கள். மூன்று பெண் குழந்தைகள் வேறே. கன்னிப் பெண்களுக்கே வழியைக் காணோம். இனிமேல் நீங்களும் நானும் புதுப்பெண்ணைக மாறினுல் உலகம் உருப்பட்டுத் தான் போகும். இன்றைக்குக் காரில் ஏறிக்கொள்ளச் சொல்கிறவன் நாளைக்குக் கஞ்சி ஊற்றப்போகிறதில்லை. கால்காசுக்கு மதிக்கமாட்டார்கள்.''

"இப்படி அறையலாமா? மனிதத்தன்மையா இது?''

"தவறு செய்தேன்; தண்டித்தார். அவருக்கு முன் கோபம்.''

"தவறு செய்யும் உரிமையும் பெண்ணுக்கு வேண்டும்.''

"என்ன!''

கல்யாணிக்கு இதைக் கேட்டவுடன் குடலைப் புரட்டிக் கொண்டு வந்தது. "போதும் அக்கா உங்கள் உறவு! நன்ருக இருக்கும் குடும்பத்தை நாசமாக்க வேண்டாம்'' என்று வெறுப்புடன் கையெடுத்துக் கும்பிட்டாள்.

மனோரமா தோள்பட்டையில் கன்னத்தை இடித்துக் கொண்டு கிளம்பினுள்.

அறை கிடைத்த பின்பு நடந்த நிகழ்ச்சிகள் மனோரமாவுக்கு எப்படித் தெரியும்? படுக்கை அறையின் நான்கு பக்கத்துச் சுவர்களுக்கும் நாவிருந்தால் அவை ஓர் அற்புதமான காவியம் பாடி ஆனந்தக் கண்ணீர் சொரிந்திருக்குமே! வேணு நள்ளிரவு வரையில் அவளை மடியில் போட்டுக்கொண்டு தேற்றிய தேற்றுதல்களையும், சொல்லிய புத்திமதிகளையும், கொஞ்சிய கொஞ்சல்களையும், பொழிந்த கண்ணீரையும் மனோரமா எப்படிக் கவனித்திருக்க முடியும்? அறைபட்ட கன்னத்தின் வடுக்களைத் தான் அவள் காண முடிந்ததே தவிர, அந்த வடுக்களின் மேல் பதிந்த அன்பு முத்தங்களின் முத்திரையைக் காண அவளுக்குக் கண்ணில்லை.

## 4

'தவறு செய்யும் உரிமை!'

பாத்திரங்களை விளக்கிக்கொண்டிருந்த கல்யாணிக்கு மனோரமா தன் வீட்டைவிட்டுப் புறப்பட்டவுடன் முதல் முதலில் இந்தச் சொற்கள்தாம் நினைவுக்கு வந்தன. பல நாட்களுக்கு முன்பு அவள் கூறியதென்றாலும், ஏனோ அவளைப் பார்க்கும்போதெல்லாம் அந்த வார்த்தை நினைவுக்கு வராதிருப்பதில்லை. இதுவரை கல்யாணி மனோரமாவைத் தவறான ஒழுக்கமுள்ளவள் என்று எண்ணவே இல்லை. கௌரவமாய் வாழத் தெரியாத வெளிவேஷக்காரி, யாரோடும் விவஸ்தையில்லாமல் பழகும் வெகுளி, வாயாடி என்ற அளவிலேயே மதித்தாள். ஆனால் தவறு செய்ய அவள் உரிமை கேட்ட பிறகு, சில தினங்களாக அவள் நடந்துகொண்ட முறையைக் கண்களால் கண்ட பிறகு, கல்யாணி சந்தேகப்படாதிருக்க முடியவில்லை.

வாட்டசாட்டமான ஓர் இளைஞன் அவள் கணவன் இல்லாத நேரத்தில் அங்கே அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தான். யாரோ அவள் கணவனின் நண்பனுக்குத் தெரிந்தவீட்டுப் பிள்ளையாம். பாதிப் படிப்பில் நின்று

போனவன். பட்டாளத்திற்குப் பக்குவமான தேகம். ஆனால், ஏனோ மனோரமா அவனுக்கு 'ரெக்ரூடிங்' ஆபீஸு'க்கு வழி காட்டாமல், வேறே வேலை வாங்கிக் கொடுப்பதாய்ச் சொல்லிப் பல இடங்களில் அலைந்துகொண்டிருந்தாள். அந்தச் சாக்கில் அவன் அடிக்கடி அவளிடம் வந்தான்; அவளும் அவனோடு வெளியில் போனாள்.

திடீரென்று மனோரமாவின் கடைசிப் பெண் கமலிக்குக் கடுமையான ஜுரம். இதைக் கேள்விப்பட்ட கல்யாணி குழந்தையைப் பார்க்கச் சென்றாள். அப்போது பொழுது சாய்ந்துவிட்டது. விளக்கு வைக்கும் நேரம்.

குழந்தை கட்டிலோரத்தில் துவண்டுபோய்க் கிடந்தாள். மூச்சில் நெருப்புப் பறந்தது. முனகலும் பிதற்றலும் நிற்கவில்லை.

"அம்மா!....அம்மா! அம்மா எங்கே பாட்டி?"

சமையற்காரக் கிழவி கண்ணீர் வடித்த வண்ணம் குழந்தையைத் தேற்றிக்கொண்டிருந்தாள். கல்யாணியை ஏறிட்டுப் பார்த்துவிட்டு ஒன்றும் பேசவில்லை.

"அக்கா எங்கே? குழந்தை கூப்பிடுகிறாளே!"

"செத்துப்போயிட்டாங்க!" என்றாள் கிழவி.

சமையற்காரக் கிழவி இதுவரையில் வாய் திறந்து யாரிடமும் நாலு வார்த்தை பேசிக் கல்யாணி கண்டதில்லை. சரியாகக்கூட வந்தவர்களைப் பார்க்கமாட்டாள். அவள் உண்டு; அவள் வேலைகள் உண்டு. கடைசிப் பெண் கமலியிடம் மாத்திரம் அவளுக்கு உயிர் என்று மனோ அடிக்கடி சொல்வாள். ஆனால் அந்தக் குழந்தைக்கு அவளிடம் பாசம் இல்லையாம்.

கல்யாணி ஆச்சரியத்தோடு கிழவியைப் பார்த்தாள். கிழவியின் கண்களில் வெறுப்பும் வேதனையும் திரண்டன.

"ஆமாங்க, புது மாப்பிள்ளைக்கு வேலை தேட வெளியில் போயிருக்காங்க. இந்தப் பாழும் தெய்வம் இவளுக்கெல்லாம் குழந்தையைக் கொடுக்குதே!''

குழந்தையை வாரி அணைத்துக்கொண்டு கிழவி தேம்பித் தேம்பி அழுதாள். வாய்ப்பூட்டு உடைத்துக்கொண்டு வார்த்தைகள் மளமளவென்று கொட்டின. "இது வீடில்லை அம்மா; சுடுகாடு! பெற்ற குழந்தைக்குச் சோறு போடாத பாவியை நீங்கள் பார்த்ததுண்டா? இந்த வீட்டுக் குழந்தையெல்லாம் அரைப்பட்டினியம்மா!''

கல்யாணிக்குச் சரியாகப் புரியவில்லை. பெரிய பெண்கள் இருவரும் எங்கோ வெளியில் போயிருந்தார்கள். ஆனால் எல்லாக் குழந்தைகளுமே கண்களில் உயிரை வைத்துக்கொண்டுதான் உலவின என்பதுமட்டும் உண்மை.

"சோறு போடக் காசில்லை; சுகந்தேடப் பணமுண்டு. குழந்தைகளைப் பட்டினி போட்டுப் பணம் சேர்த்தால் தானே அலங்காரம் செய்துகொண்டு ஆட்டம்பாட்டத்திற்குப் போகலாம்!''

கல்யாணியின் கரத்தைப் பற்றிக் கிழவி பரபரவென்று அடுக்களைக்கு இழுத்துச் சென்றாள். அங்கே சில பாத்திரங்கள் விளக்கிக் கவிழ்த்திருந்தன. "குழந்தையை நான் கவனிச்சதாலே, அதிசயமா இன்னிக்கு இந்தம்மா பாத்திரம் விளக்கினாங்க. —இந்தாங்க, இந்தத் தவலையைப் பாருங்க!''

கல்யாணி பார்த்தாள். அந்த வெண்கலத் தவலை வெளியில் முகம் தெரிகிறமாதிரி அவ்வளவு பிரகாசமாக இருந்தது. நன்றாகத்தானே விளக்கியிருக்கிறாள் என்பது போல் கிழவியை நோக்கினாள்.

"உள்ளே பாருங்க.''

சாதம் வடித்த பற்றுத் திட்டுத் திட்டாய் ஒட்டிக் கொண்டிருந்தது. கஞ்சியின் வழுவழுப்புக் கொஞ்சமும் போகவில்லை.

"இவங்கதான் உங்க மனோரமா அக்கா!"

கிழவி வெறிகொண்டவள்போல் பேசத் தொடங்கினாள்: "இத்தனை நாளாய்ப் பொறுத்தாச்சு; இனிமேல் பொறுத்தால் பைத்தியம் பிடிச்சுப்போகும். நாய்கூடத் தான் வயிறு வளர்க்குது. எனக்கு இந்தப் பிழைப்பு வேண்டாம்மா! நான் யானமாக் குடும்பம் நடத்தனவ; நாலு பிள்ளைகுட்டி பெத்துப் பறிகொடுத்தவ; வயித்துச் சோத்துக்காக இங்கே வந்தேன். கமலிக்குச் சுகமானவுடனே எங்கேயாச்சும் தலையிலே துணியைப் போட்டுட்டுப் போப்போறேன். இந்தப் பாவத்தை இனிமேலும் கண்ணாலே பாத்தாக் கண் அவிஞ்சு போகும்."

கிழவி கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

"நானுந்தான் ஒருத்தருக்குக் கழுத்தை நீட்டி முப்பது வருஷம் வாழ்ந்திட்டேன். அவர் முரடர்; என்னை அடிப்பார், உதைப்பார், திட்டுவார். அதுக்காக அவருக்கு நான் மனசிலேயாவது துரோகம் நினைச்சிருக்கேனா? வேலைக்கு நான் வந்தபோது இந்தம்மா என்ன சொன்னாங்க தெரியுமா? 'வீட்டு விவகாரம் வெளியே போகப் படாது; போனால் நீயும் போயிடுவே'ன்னாங்க. இப்போ நானாப் போப்போறேன். இந்த அக்கிரமத்தையும் அநியாயத்தையும் உங்ககிட்டச் சொல்லிட்டுத்தான் போவேன். சோத்துக்கு வழியில்லாமல் தப்புப் பண்றவங்க உலகத்திலே உண்டு; ஆம்பிளைத் துணையில்லாமல் கெட்டுப் போறவங்களும் உண்டு. ஆனால், கண்ணுக்கு நிறைஞ்ச புருஷன், வயிறு நிறைஞ்ச சோறு, இடுப்பு நிறைஞ்ச துணி இருக்கிறப்போ ஒருத்தி கெட்டுப்போனால் அவளை எந்தப் பேர் சொல்லிக் கூப்பிடறது? தேவடியாளுக்கு இது தொழில்; பட்டினி கிடக்கிறவளுக்கு இது சோறு; ஆணில்லாதவளுக்கு இது தேவை. —இந்தக் கேடுகெட்டவளுக்கு இது என்ன? என்ன இது? துரோகம்! துரோகம்! பச்சைத் துரோகம்!"

கல்யாணிக்குத் தான் ஓர் புலிக்கூண்டில் அகப்பட்டுக் கொண்டதுபோல் உள்ளம் பதைபதைத்தது.

"இதெல்லாம் மனோரமாவின் வீட்டுக்காரருக்குத் தெரியாதா?" என்றாள்.

"அடிச்சுக் கறக்கற மாட்டை ஐயா அணைச்சுக் கறக்கறாரு. கறக்கிறவனைக் குப்புறத் தள்ளி உதைச்சுட்டு மாடு குமமாளம் போடுது. பெண்டாட்டியிடம் பிரியமா இருக்கிறதுன்னு, அவ இஷ்டப்படி வெளியே திரியவிட்றதில்லே. இதுக்குப் பேர் கையாலாகாத்தனம்!"

இடிஇடித்ததுபோல் சத்தம் கேட்டு, வாசற் கதவு படீரென்று திறந்தது. கல்யாணி நடுங்கிப்போனாள். புதரிலிருந்து பாயும் வேங்கை மாதிரி முத்துச்சாமி கிழவியின் மேல் பாய்ந்தான். ஒரு கையால் தலைமயிரைப் பிடித்துக் கொண்டு, மறு கையால் பளீர் பளீரென்று அறைந்து அவளை வெளியே கொண்டுபோய்த் தள்ளினான்.

"உள்ளே நுழைந்தால் காலை முறித்துவிடுவேன்; பிச்சைக்காரக் கழுதை!"

"இன்னும் ரெண்டுநாள் கழிச்சு குழந்தைக்குச் சுகமானவுடனே போயிட்றேனுங்க."

"ரொம்ப அக்கறைதான்; போடி வெளியே!"

"ஒருதரம் பார்த்துட்டுப் போறேனுங்க."

உள்ளே நுழையப்போனாள். தோளைப் பற்றித் தரையில் தள்ளினான் முத்துச்சாமி. அதே இடத்தில் அவளை அறைந்து அறைந்தே கொன்றுவிடுவான்போல் இருந்தது.

கல்யாணிக்குக் கைகால் வழங்கவில்லை. புறப்படத் தொடங்கினாள். கிழவிக்கு எந்த விதத்திலும் உதவி செய்ய அவளால் முடியவில்லை.

"உங்களுக்கு அடுத்தவீட்டு விவகாரத்தில் ஏன் இந்த அக்கறை? ஊர் வம்பு பேச இது என்ன சந்தை மடமா?" என்று கல்யாணியைப் பார்த்துச் சீறினான். அவள் பதில் பேசாது ஓட்டமும் நடையுமாய்த் தன் வீடு வந்து சேர்ந்தாள்.

மாடி அறை ஜன்னலிலிருந்து பார்த்தால் கல்யாணிக்கு மனோரமாவின் வீட்டு ஹாலில் நடப்பது தெரியும். வேணுவும் இன்னும் வந்து சேரவில்லை. மெதுவாக ஜன்னலருகில் வந்து சுவரில் சாய்ந்துகொண்டு கவனித்தாள். கிழவிக்கு மேற்கொண்டு ஏதும் ஆபத்து வந்துவிடப் போகிறதே என்று அவளுக்குப் பயம்.

முத்துச்சாமியின் படபடப்பு இன்னும் ஓயவில்லை. குழந்தையின் படுக்கையருகில் வந்து சற்றுநேரம் கைகட்டிக்கொண்டு நின்றான். குழந்தை இடைவிடாது தன் தாயை அழைத்துக்கொண்டிருந்தது. 'தர்மாமீட்டரை' வைத்துக் காய்ச்சலைக் கவனித்தவுடன் அவன் முகம் வெளுத்தது. பதற்றத்தோடு வெளியே வந்து கிழவியைத் தேடிப்பார்த்தான். அவளை அங்கே காணவில்லை.

கதவைச் சும்மா சாத்திவிட்டுக் குழந்தைமீது போர்வையை இழுத்து விட்டான். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் குழந்தை களைப்பால் தூங்கத் தொடங்கியது. அவனும் ஹால் விளக்கை மட்டும் எரியவிட்டு, பக்கத்து அறையில் போய் விழுந்தான்.

கால்மணி நேரம் சென்றது. அவன் அறையைவிட்டு வெளியே வரக் காணவில்லை. சற்று நேரத்திற்கெல்லாம் மனோரமாவின் வீட்டு வெளிக்கதவு திறந்தது. முதலில் மனோரமா துள்ளல் நடையுடன் உள்ளே நுழைந்தாள். அவள் பின்னாலேயே திருட்டு விழியோடு அந்த ஆணழகனும் நுழைந்தான். வாசற் கதவு படீரென்று தாழிடப் பட்டது.

மனோரமா கிழவியின் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாள். குழந்தைகளைக் கூப்பிட்டாள். பதில் ஒன்றும் வராமல்போகவே, "எங்கே, அந்தக் கிழட்டுப்பிணத்தைக் கூடக் காணோம்? கொல்லைப் பக்கத்தில் தூங்கி வழிந்து கொண்டிருக்கும்!" என்றாள்.

அடுத்த நிமிஷம் அவள் கண்கள் வீட்டைச்சுற்றி ஒரு முறை சுழன்று வந்தன. மறுநிமிஷம் கண்களில் களிவெறி

துள்ளத் தாவிச் சென்று அவன் மார்பில் சாய்ந்தாள். அவனுடைய முகம் குனிந்து அவள் முகத்தில் கவிழ்ந்தது.

கல்யாணியின் கண்களில் ஊசி பாய்ந்தது போன்ற ஒரு வேதனை.

இருட்டறைக்குள்ளே திடீரென்று ஒளிவெள்ளம்.

மறுபடியும் அந்த வீட்டில் இடியோசை.

சூறுவளி மாதிரி முத்துச்சாமி அறையைவிட்டு வெளியே வந்தான். பட்டாளத்திற்கு லாயக்கான அந்த இளங்காளை, எதிர்த் தாக்குதலுக்குத் தயாராகாமல் ஓட்டப் பந்தய நிபுணனாக மாறினான். அவனுடைய ஓட்டத்தால் தெருவே அதிர்ந்தது. மனோரமா நிலைகுலைந்து கீழே விழுந்தாள். மெதுவாக அவன் கால்களைப் பற்றப் போனாள். முத்துச்சாமி ஓங்கி அவள் முகத்தில் உதைக்கப் போனவன், ஏனோ சிரமப்பட்டு அந்தக் கோபத்தை அடக்கிக்கொண்டான். பயங்கரமான சிரிப்பாக அந்தக் கோபம் மாறியது.

அவளைக் கண்ணிமைக்காமல் பார்த்தான். பிறகு பேசினான்: "நினைத்துப் பார்! கையெழுத்துப் போடத் தெரியாதவளை, கால்படி அரிசி வைத்துப் பொங்கத் தெரியாதவளை, பிழைப்புக்கு வழியற்ற குடும்பத்தில் பிறந்தவளை, இந்த நிலைக்குக் கொண்டுவந்தேனே, நினைத்துப் பார்! கடமை கிடக்கட்டும்; நன்றி உணர்ச்சிகூட வேண்டாமா?"

"மன்னித்து விடுங்கள்!" — திரும்பவும் கால்களைப் பிடிக்கப்போனாள்.

முத்துச்சாமி மீண்டும் அந்தப் பழைய சிரிப்புச் சிரித்தான்.

"மன்னிப்பா! கேட்கவேண்டிய இடத்தில் போய்க் கேள். உனக்கு இனிமேல் இந்த வீட்டில் யாரும் இல்லை. பிள்ளைகளும் இல்லை, புருஷனும் இல்லை. வா, எழுந்திரு!"

அவள் எழுந்திருக்கவில்லை. மெதுவாகவும் நிதானமாகவும் அவன் அவளுக்குச் சொல்லிப்பார்த்தான். முடி

யாமற்போகவே, கட்டாயப்படுத்தி அவளைத் தூக்கி நிறுத்தினான். கதவருகே தள்ளிக்கொண்டு போனான்.

"கமலி!" என்று கதறிக்கொண்டு அவள் திமிறிப் பார்த்தாள்; அவன் விடவில்லை.

முதலில் வாசற் கதவுக்கு வெளியே கொண்டு வந்தான். அடுத்தாற்போல் வெளிவாசல் கேட்டுக்கு வெளியே கொண்டுவந்தான். அங்கே அவளைத் தள்ளிச் சாத்திவிட்டுக் கதவுகளைத் தாழிட்டான்.

அந்த வீட்டில் அதன்பிறகு இருள்சூழ்ந்தது.

மாடியில் இருந்த கல்யாணி தெருச் சுவரில் சாய்ந்து நின்ற மனோரமாவை உற்றுக் கவனித்தாள். தெரு விளக்குகளான மின்மினிச் சுடரில் மனோரமா அணிந்துகொண்டிருந்த போலி வைரங்களும், கில்ட்டு நகைகளும் வானத்து மீன்களைக் கண்டு பல்லைக் காட்டிப் பரிகசித்தன.

# கற்பனையே தவிர...

நான் இப்போது போலீஸ் 'லாக்-அப்'பில் பத்திரமாய் இருக்கிறேன். இங்கிருந்து தப்புவதற்கு ஒரே ஒரு வழி காண்பித்திருக்கிறார்கள். நான்தான் நான் என்று இவர்களிடம் நிரூபிக்க வேண்டும்! மூன்று மணி நேரத்திற்குள் ஒரு சிறுகதை எழுதிமுடித்தால் என்னைக் கட்டாயம் எழுத்தாளர் 'அரிச்சந்திரன்' என்பதை ஒப்புக்கொள்கிறார்களாம். இல்லாவிட்டால்?—

ஒரு கட்டுக் காகிதம், மை அடைத்த பேனா, கனமான அட்டை இவ்வளவும் எதிரே தயாராக இருக்கின்றன. வெளியே ஜவான்களின் செருப்புச் சத்தம் 'சர்புர்' என்று கேட்கிறது. டெலிபோனில் சப்-இன்ஸ்பெக்டர் யாருடனோ பேசுகிறார். என்னைப்பற்றி ஏதும் இருக்குமோ என்று உற்றுக் கேட்டால், ஏதும் சரியாகக் காதில் விழவில்லை.

இத்துடன் இரும்புக் கம்பிக்கு வெளியே என் மனைவி பத்மா அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் உட்கார்ந்திருக்கிறாள். அவளைப் பார்த்தால், நான் முதல்முதல் கதை எழுதுவதற்குப் பேனா பிடித்த வேளையைச் சபிக்கிறவள் மாதிரி தோன்றியது. ஒரு வகையில் 'லாக்-அப்'புக்குள் எனக்குப் பூரண சுதந்தரம் கிடைத்துவிட்டது போல் உணர்ச்சி. ஆனால் எதையும் இங்கே நம்ப முடியாது. பழைய 'கேடி' ஒருவனைத் திடீரென்று பிடித்து வந்து என்னோடு உள்ளே தள்ளினாலும் தள்ளுவார்கள்.

பத்மாவை அடக்கி இந்த நிலைக்குக் கொண்டு வருவதற்குள் ஒரு தொடர்கதை எழுதும் வேதனை கிடைத்தது. நாடகத்தில் வரும் கதாநாயகிபோல் சப்-இன்ஸ்பெக்டருடன் வாதாடத் தொடங்கினாள்.

"என்னையும் இவரோடு உள்ளே அனுப்புங்கள். நான் இங்கே தனியாக இருக்கமுடியாது!" என்று கத்தினாள்.

எங்கே அவளையும் உள்ளே அனுப்பிவிடப்போகிறார்களோ என்ற பயம் எனக்கு. அப்புறம் மூன்று மணி என்ன, முப்பது மணியானாலும் சிறுகதையின் முதற் பக்கத்தை எழுதிவிட்டுக் கீழே 'தொடரும்' என்று போட வேண்டியதுதான்.

பத்மா கம்பிக்கு வெளியே உட்கார்ந்து என்னைக் கண்களால் சுட்டெரித்துக்கொண்டிருந்தாள். சப்-இன்ஸ்பெக்டரும் நானும் பேசிக்கொண்டிருக்கும்போது அவள் குறுக்கே விழுந்து ஆத்திரத்தோடு பேசிய பேச்சு! அவர் இன்னொரு சப்-இன்ஸ்பெக்டராகவோ நான் இன்னொரு நானாகவோ இருந்தால் நிச்சயம் பொறுத்திருக்க மாட்டோம். அவருக்கு வந்து வாய்த்தவளும் பத்மாவைப் போல் வாயாடியாக இருக்கவேண்டும். அதனால்தான் அவர் நல்ல மனிதராகவும் பொறுமையுடையவராகவும் காணப்பட்டார்.

என்னிடம் பத்மா சீறி விழுந்தாள்: "நீங்களாவது, கதை எழுதுகிறதாவது!—ஸார், இவரை நம்பாதீர்கள்; இவர் எழுதமாட்டார்; உங்களை ஏமாற்றுகிறார்."

எனக்குப் பகீரென்றது. நம்பிக்கைமோசம், ஏமாற்று—இதைச் சேர்ந்த சந்தேகத்தில்தான் என்னைக் கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள். இவளோ எனக்குப் பரிந்து பேசுகிற லட்சணம் இப்படி இருக்கிறது. என்னை நம்ப வேண்டாமாம்! நான் ஏமாற்றுகிறேனாம!

"பத்மா, வாயை மூடு!—ஸார், நிச்சயம் நான் எழுதி விடுகிறேன் ஸார்."

"இல்லை ஸார், எழுதமாட்டார்! எழுதவேமாட்டார்! எத்தனை பத்திரிகாசிரியர்களை ஏமாற்றியிருக்கிறார், தெரியுமா?"

சப்-இன்ஸ்பெக்டர் சந்தேகம் நிறைந்த கண்களோடு என்னை உற்றுப் பார்த்தார். என்னால் கோபத்தை அடக்க முடியவில்லை. ஓங்கி அவள் கன்னத்தில் நாலு அறை வைக்கலாமா என்று நினைத்தேன். நம்பிக்கைமோசம்,

ஏமாற்று—இந்தப் பொய்க் குற்றங்களோடு மனைவியை அறைந்த நியாயமான குற்றமும் ஒன்றுசேரட்டுமே!

"உங்களுக்கு 'மூட்' வருவதற்கே மூன்று நாள் ஆகுமே! ஏன் அவரிடம் இந்தப் பொய் சொல்கிறீர்கள்?"

"பாதி 'மூட்' அவர்கள் கொடுத்துவிட்டார்கள்; இன்னும் பாதியும் உன்னால் வந்தது. இப்போது இருக்கிற உணர்ச்சியில் மூன்று நிமிஷத்தில்கூட எழுதிவிடுவேன்."

"அவர்தாம் எழுதுவதாகச் சொல்கிறாரே, நீங்கள் கொஞ்சம் சும்மா இருக்கக்கூடாதா?" என்றார் இன்ஸ்பெக்டர்.

அப்படியும் அவள் சும்மா இருக்கவில்லை.

"இதோ பார்; இனி நீ வாயைத் திறந்தால் நான் அவர்கள் சொல்கிற எல்லாக் குற்றங்களையும் ஒப்புக் கொண்டு ஜெயிலுக்குப் போய் நிம்மதியாய் இருந்துவிடுவேன். —என்ன சொல்கிறாய்?"

ஓவென்று அழத் தொடங்கிவிட்டாள் பத்மா. படித்த பெண்ணுக்கும் படிக்காத பெண்ணுக்கும் ஒரு வித்தியாசம். படிக்காதவளுக்குத் தன்னால் தெரியாது; சொன்னால் கேட்டுக்கொள்வாள். படித்தவளுக்குத் தன்னாலும் தெரியாது; சொன்னாலும் கேட்கமாட்டாள். பத்மா கொஞ்சம் படித்தவள்.

## 2

சுமார் இரண்டு மாதங்களுக்குமுன்பு நடந்த சம்பவம் இது.

அதிகாலையில் படுக்கையைவிட்டு எழுந்தவுடன் யாரோ வாசலில் காத்துநிற்பதாகப் பத்மா கூறினாள். இரண்டு பேர் நின்றுகொண்டிருந்தார்கள். கண்களைத் துடைத்தபடியே அவர்கள் முகத்தில் போய் விழித்தேன். கிட்டத்தட்ட இருவருக்கும் ஒரே வயது இருக்கும். அழுக்கு வேஷ்டியும் கிழிசல் சட்டையுமாய்க் காட்சி அளித்தார்கள்.

"ஆசிரியர் அரிச்சந்திரன் இருக்கிறாரா?"

"ஏன், நான்தான்; உங்களுக்கு என்ன வேண்டும்?"

உள்ளே அழைத்துவந்து அறையில் உட்கார வைத்தேன். முதற் பார்வையிலேயே அவர்கள் ஏதோ உதவிக்காக வந்திருப்பது தெரிந்துவிட்டது. அவர்களைக் கொஞ்சம் கண்களால் எடைபோட்டேன். அவர்களும் அதே காரியத்தைச் செய்திருக்க வேண்டும்.

கொஞ்சம் உயரமாக, ஒல்லியாக, நீண்ட முகத்தோடு, சப்பைக் கன்னங்களுடன் இருந்தவன் என்னிடம் பேச்சுக் கொடுத்தான். வகிடு எடுக்கப்படாத கிராப்புத் தலை அவனுக்கு. திக்கித் திக்கிப் பேசினான். இன்னொருவன் குட்டையாகத் தலையில் மயிர் அதிகம் இல்லாமல் ஒல்லியாய்க் கறுப்பாய் இருந்தான். அவன் வாயே திறக்கவில்லை. என் பேச்சை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தான்.

ஒல்லியான ஆசாமி சென்னைப் பத்திரிகாலயம் ஒன்றில் தான் அச்சுக் கோக்கும் வேலை பார்ப்பதாய்க் கூறினான். பத்திரிகைகளைப் பற்றியும், எழுத்தாளர்களைப் பற்றியும் அவன் அதிகம் தெரிந்தமாதிரி பேசினான். என்னைப் பற்றியும் நடுநடுவே சில கேள்விகள் கேட்டுப் பதில் வாங்கிக்கொண்டான்.

"திருச்சிப் பக்கம் சுற்றிப்பார்க்க வந்தோம். சென்னை திரும்பப் பணம் போதவில்லை. கொஞ்சம் உதவி செய்தால் போய் அனுப்புகிறோம்."

ஏழைகளுக்கு இரங்கி இரங்கிப் பரம ஏழையாய்ப் போய்க்கொண்டிருப்பவன் நான். படிப்பறிவும் கலை உணர்வும் உள்ள ஏழைகளாயிற்றே என்று நினைத்துக் கையில் மூன்று ரூபாய் கொடுத்து, காலைப் பலகாரத்தைப் பக்கத்துக் கடையில் நடத்தி அனுப்பினேன். பணம் திரும்பக் கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

இரண்டு நாட்களில், எந்தப் பத்திரிகையில் வேலை பார்ப்பதாய்ச் சொன்னார்களோ அதன் ஆசிரியரைச்

சந்தித்தேன். அந்த மாதிரி ஆட்கள் தம்மிடம் இல்லை என்பதைத் தெரிவித்துவிட்டார். மூன்று ரூபாயும் சில் லரையோடும் அந்த அத்தியாயம் முடிந்துவிட்டதாய்ப் பேசாதிருந்தேன்.

ஆனால் விஷயம் அதோடு முடியவில்லை. இரண்டு வாரங்கள் கழித்துக் கோயம்புத்தூரிலிருந்து ஒரு பத்திரி காசிரியர் எழுதியிருந்தார். எதிர்பாராத கடிதம்.

அன்புள்ள அரிச்சந்திரன் அவர்களுக்கு,

தங்களுக்கு வலக்கைப் பெருவிரலில் ஏற்பட்ட சுற்று இப்போது ஆறிவிட்டதா? தாங்கள் துணைவியா ரோடு பழனியிலிருந்து புறப்பட்டு இங்கு வருவதாக எழுதியபடி ஏன் வரவில்லை? நேரே திருச்சிக்குப் புறப்பட்டுவிட்டீர்கள் போலும். தங்கள் மனைவியார் சுசீலா-அரிச்சந்திரன் கடிதம் கண்டு நாங்கள் அனுப் பிய தந்திமணியார்டர் ரூபாய் இருபத்தைந்து தங்க ளுக்குப் பழனியில் கிடைததிருக்கும். நேரே வராமற் போனதால் தயவுசெய்து ஒரு கடிதம் எழுதுங்கள்.

தங்களன்புள்ள,

.... .... .... ....

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. பழனிக்கு நான் எப்போது போனேன்? எப்போது எனக்கு நகச்சுற்று வந்தது? எதற்காக நான் பணம் கேட்டு அவர்களுக்கு எழுதியிருந்தேன்? யார் இந்தச் சுசீலா-அரிச்சந்திரன்?

தலை சுற்றியது எனக்கு. உடனே அந்தச் சுசீலா எழுதிய கடிதத்திற்கு நகல் கேட்டு அவர்களுக்கு எழுதி னேன். இதோ, அவளுடைய கடிதம்:

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு,

சுசீலா-அரிச்சந்திரன் எழுதுவது: என் கணவ ருக்கு வலக்கைப் பெருவிரலில் நகச்சுற்று வந்திருப்

பதால் அவரால் எழுத முடியவில்லை. என்னை எழுதச் சொன்னர்.

நாங்கள் குற்ருலம் சென்றிருந்தோம். திரும்பும் வழியில் பழனி வந்திருக்கிருேம். நாளை புறப்பட்டுக் கோவை வந்து, தங்கள் ஆபீசுக்கும் வருகிருேம். நம் நாட்டில் பெருகிவரும் வேலையில்லாத் திண்டாட்டத்தால் ரெயில்வே நிலையங்களில் திருடர்கள் பெருகிவருகிருர்கள். அவர்களின் திருவிளையாடல்களில் இவரும் ஏமாந்துவிட்டார். இது விவரம் யாருக்கும் தெரியவேண்டாம். இந்தக் கடிதம் கண்டவுடன் தந்திமணியார்டரில் ரூபாய் இருபத்தைந்து அனுப்புங்கள். அவசரத் தந்தியில் அனுப்புக. மற்றவை நேரில்.

சுசீலா-அரிச்சந்திரன்.

நான் இரண்டு முறை படித்தேன். பத்மா இருபது முறை படித்தாள். அழுகையும் ஆத்திரமும் அவளால் அடக்கமுடியவில்லை.

"யார் இந்தச் சுசீலா?"

"யாருக்குத் தெரியும்?"

"என்னை ஏமாற்றவேண்டாம். உங்களுக்குத் தெரியாத ஒருத்தி இப்படிச் செய்யமாட்டாள். உங்களை நன்ருய்த் தெரிந்தவள் தான் இவள்."

எனக்குத் தர்மசங்கடம். "இப்படி ஒருத்தி இருக்கவே மாட்டாள். மானமுள்ள எந்தப் பெண்ணுவது தன்னை இன்னொருவன் மனைவி என்று சொல்லிக்கொள்வாளா! நவீன அரிச்சந்திரனின் கற்பனை-மனைவி இவள்."

"மானமுள்ளவர்களைப் பற்றித்தான் கவலை இல்லையே! எல்லாம் உங்களுடைய தப்பு."

தர்க்கரீதியாகப் பெண்ணிடம் பேசிப் பயன் இல்லை என்று வாயை மூடிக்கொண்டேன். பத்மா மனம்கொண்ட மட்டும் பேசித் தீர்த்தாள். அவள் ஓய்ந்த சமயத்தில்

பதிப்பாளர் நண்பர் முத்துச்சாமி இன்னோர் அதிசயத்துடன் வந்து சேர்ந்தார். அவருக்கும் ஒரு சுசீலாவின் கடிதம்!

"அரிச்சந்திரன் ஸார்! நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள்? திருவனந்தபுரம் ஹோட்டலில் தங்கியிருப்பதாய்க் கடிதம் வந்திருக்கிறதே! கையில் நகச்சுற்றுமே?"

பழைய கதையேதான். அவசரத் தந்தியில் நூறு ரூபாய் பணம் வேண்டுமாம்.

"பத்மா-அரிச்சந்திரனைத்தான் எனக்குத் தெரியும். சுசீலா என்று புதிதாய் இருக்கிறதே என்று சந்தேகப்பட்டு நேரில் வந்தேன்."

நானும் முத்துச்சாமியும் சேர்ந்து அந்தப் போலி நபரை உடனே பிடிப்பதற்குத் திட்டங்கள் போட்டோம். பழனியிலிருந்து கடிதம் எழுதி ஒரு வாரத்திற்குப் பின்பு அவன் திருவனந்தபுரத்தில் தந்திமணியார்டரை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறான். கடிதத்தில் தெளிவான விலாசம் இருந்தது. பணம் மாத்திரம் சுசீலா பெயருக்கு அனுப்பாமல் அரிச்சந்திரனுக்கு அனுப்பவேண்டுமாம்! இதிலிருந்து சுசீலா என்ற ஒருத்தி இல்லவே இல்லை என்பதை நாங்கள் - பத்மாவைத் தவிர - ஒப்புக்கொண்டோம்.

"ஆசாமி அகப்பட்டுக்கொண்டான்!"

"எப்படி?" என்றார் முத்துச்சாமி.

"உங்கள் பேரில் ஒரு தந்தி கொடுத்து அவனை அங்கே காத்திருக்கச் சொல்லுங்கள். போலீஸில் புகார் செய்து உடனே பிடித்துவிடுவோம். 'டெலிபோன்' மூலமாகவே எல்லாம் செய்துவிடுவார்கள்."

"அபார யோசனை!"

"போலீஸுக்கு நாமும் வேண்டிய உதவி செய்வோம். திருவனந்தபுரம் போலீஸைத் தந்திச் சேவகன் மாதிரி போகச் சொல்லவேண்டும். பயல் கட்டாயம் அகப்பட்டுக்கொள்வான்."

"அரிச்சந்திரன் ஸார்!"

"என்ன?"

"உங்களுக்கு அபார மூளை. அவனை வில்லனாக வைத்து ஓர் அருமையான துப்பறியும் நாவல் எழுதுங்கள். அதில் கடைசியாக அவனை என்ன பாடு படுத்தவேண்டும், தெரியுமா? நாயை அடிப்பதுபோல் நடுத்தெருவில் விட்டு அடிக்கவேண்டும். பல்லை உடைத்துக் கையில் கொடுக்க வேண்டும். நாலு பேர் மத்தியில் வைத்து முதுகுத்தோலை உரிக்கவேண்டும்!"

"வேண்டாம் ஸார்; தொலைந்து போகிறான்!" என்றேன் நான்.

"உங்களுக்கு எப்போதுமே இப்படித்தான். ஆமாம், அந்தச் சுசீலாவையும் சும்மா விடக்கூடாது; வெட்கம் கெட்டவள்!" என்றாள் பத்மா.

## 3

எழுத்தாளர், பதிப்பாளர் ஆகிய நாங்கள் இருவரும் அடுத்த நிமிஷமே மலையைப் புரட்டப்போகிற மாதிரி முகங்களை வைத்துக்கொண்டு போலீஸ் ஸ்டேஷன் போனோம். எழுதுகிற பேர்வழி என்று தெரிந்தவுடன் சப்-இன்ஸ்பெக்டர் அக்கறையோடு விசாரித்தார். கடிதங்களைக் கொடுத்தோம். விவரங்களைச் சொன்னோம். எங்களுடைய அருமையான யோசனைகளையும் வெளியிட்டோம். அவரும் யோசனை செய்தார்.

"ஆள் அகப்பட்டுக்கொண்ட மாதிரி" என்றேன் நான்.

"மாதிரி என்ன? பயல் மாட்டிக் கொண்டான்!" —முத்துச்சாமி.

"ஆனால்...." என்றார் இன்ஸ்பெக்டர்.

எனக்கு இந்த ஆனாலைக் கண்டால் பிடிக்கவே பிடிக்காது. தயக்கத்தோடு அவரைக் கவனித்தேன்.

"இத்தனை அவசர நடவடிக்கைகள் செய்யவேண்டிய பெரும் குற்றந்தானு இது? செய்தாலும் குற்றவாளி அகப் படுவானு? அகப்பட்டாலும் குற்றத்தை நிரூபித்து அவ னுக்குத் தண்டனை வாங்கித் தரமுடியுமா?—இவற்றை யெல்லாம் நாங்கள் யோசிக்கவேண்டும்."

"பெரிய குற்றம் இல்லையா இது?"

"உங்களுக்குப் பெரிய குற்றந்தான். ஆனுல்...."

டெலிபோன் மணி கிணுகிணுத்தது. மேல் அதிகாரி ஒருவரின் குரல் அதிகார தோரணையில் படபடப்போடு ஒலித்தது. சப்-இன்ஸ்பெக்டர் பதிலளித்தார்.

"பங்களாவில் இரண்டு கொலையா? சரி சரி, இதோ போகிருேம்....உடனே ரிபோர்ட் அனுப்புறேன் ஸார்!.... ....சரி, ஸார்! சரி, ஸார்!....இடம் தெரியும் ஸார்!"

பெரிய குற்றம் என்ருல் என்ன என்பதைக் காதால் கேட்டுக்கொண்டு வேகமாய் அந்த இடத்தைவிட்டு நழுவி ேனும். நாகரிக வளர்ச்சி என்பதற்கு நான் குற்றங்களின் வளர்ச்சி என்று அர்த்தம் செய்துகொண்டேன். வீட்டிற்கு வந்ததும் வராததுமாய், பதிப்பாளர் துப்பறியும் நாவலில் இறங்கினுர்.

"துப்பறியும் நாவலைக் குப்பையில் போடுங்கள்!"

நண்பர் வாயை மூடிக்கொண்டார். வாசலில் யாரு டைய குரலோ கேட்டது.

"அரிச்சந்திரன் இருக்கிருரா?"

எழுந்துபோய் அவர் எதிரில் நின்றேன். "நான்தான் அரிச்சந்திரன். உங்களுக்கு என்ன வேண்டும்?"

"நீங்களா? இல்லையே! எனக்கு அவரைத் தெரியுமே! —பழனியில் என் வீட்டில் இரண்டுநாள் தங்கியிருந்தார்."

அவரை உள்ளே அழைத்துக்கொண்டு வந்து வைத்து, மற்றவர்களின் முன்னிலையில் நான்தான் நான் என்பதை நிரூபித்துக்கொண்டேன். அந்த 'டூப்ளிகேட்' அரிச்சந்திரன் கதர் ஜிப்பா போட்டிருந்தாராம். வகிடு எடுக்காத கிராப்,

ஒல்லி, உயரம், ஒட்டிய கன்னம்—எல்லாம் முன்பொரு நாள் மூன்று ரூபாய் வாங்கிப்போன மனிதனுக்குச் சரியாக இருந்தன.

"நான் யாரிடமும் என் பெயரைச் சொல்வதும் இல்லை; உதவியை நாடுவதும் இல்லையே! என்னைத் தெரிந்துகொள்ள என் எழுத்தைப் படித்தால் போதாதா?"

"இப்படிச் சொல்லிச் சொல்லித்தான் ஆபத்து வந்தது. கூட்டங்களில் பேசக் கூப்பிட்டால் போவதில்லை. பத்திரிகைகள் படம் கேட்டால் அனுப்புவதில்லை. இப்போது பார்த்தீர்களா, பலனை?" என்றாள் பத்மா.

"பத்திரிகைகளில் உங்கள் படம் போட்டு விளம்பரம் செய்யவேண்டும்" என்றார் பழனி அன்பர்.

"அவ்வளவு தூரம் எதற்கு? சீக்கிரம் நாம் ஒரு பத்திரிகை ஆரம்பிப்போம். பக்கத்திற்குப் பக்கம் ஆசிரியர் படத்தைப் போடுவோம். அரிச்சந்திரன் எழுதுகிறார்; அரிச்சந்திரன் கற்பனை செய்கிறார்: அரிச்சந்திரன் தூங்குகிறார். இன்னும், அவர் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கிறார்; திறப்புவிழா நடத்துகிறார்; பூமாலை போட்டுக் கொள்கிறார். —எப்படி என் யோசனை?" என்றார் முத்துச்சாமி.

"அப்புறம் படத்தைப் பார்ப்பதோடு சரி; எழுத்தைப் படிக்கமாட்டார்கள்."

தொல்லை இத்துடன் தீரவில்லை. ஒரு வாரத்தில் திருச்சூரிலிருந்து இன்னொரு விபரீதமான கடிதம், எங்கோ பத்திரிகைக்குப் போய்விட்டு எனக்குத் திரும்பி வந்தது.

அன்பார்ந்த அரிச்சந்திரன் அவர்களுக்கு,

வணக்கம்.

தாங்கள் ஊருக்குப் புறப்பட்டபிறகு இதுவரை எனக்குக் கடிதங்கூட எழுதவில்லையே! என்னுடைய நாட்டியத்தையும் பாட்டுக்களையும் அதற்குள் மறந்

திருப்பீர்கள் என்று நினைக்கவில்லை. சினிமா ஸ்டுடியோக்களில் சொல்லி என் வாழ்வைப் பிரகாசிக்க வைப்பதாய் வாக்களித்தீர்கள். முதலில் 'எக்ஸ்ட்ரா' நட்சத்திரமாகக் கிடைத்தால்கூடப் போதும். எதற்கும் உங்களையே நம்பியிருக்கிறேன்.

அத்தோடு நான் எழுதிய முதல் சிறுகதை 'கசங்கிய மல்லிகை'யைத் தாங்கள் ரொம்பவும் பாராட்டினீர்கள். பத்திரிகைக்குக் கொடுப்பதாய் எடுத்துச் சென்ற அதை எந்தப் பத்திரிகையில் கொடுத்திருக்கிறீர்கள்? எப்போது பிரசுரமாகும்?

தயவுசெய்து இன்றைக்கே பதில் எழுதிவிட்டு மறுவேலை பாருங்கள். இனியும் அதிகமாக நான் என்ன எழுதுவது? நீங்கள் இங்கே தங்கிய அந்தப் பொழுதை என்னால் மறக்கமுடியவில்லை.

இப்படிக்கு,
குமாரி மல்லிகா

எனக்குத் தலை சுற்றியது. பத்மா பத்திரகாளியாகி விட்டாள்.

"யார் இந்தக் கசங்கிய மல்லிகை?"

"கடிதத்தைப் படித்தாலே யாரென்று தெரிகிறதே!"

"நீங்கள் இந்தக் கதை எழுதுகிறதை உடனே நிறுத்தப் போகிறீர்களா, இல்லையா?"

"நிறுத்துகிறேன். ஆனால் பாதியில் நிற்கும் தொடர் கதை என்ன ஆவது? பத்திரிகைக்காரர்களும் விடமாட்டார்கள்; படிப்பவர்களும் விடமாட்டார்கள்."

கசங்கிய மல்லிகையின் கடிதத்தை நன்றாய்க் கசக்கிக் குப்பைத் தொட்டியில் வீசினாள் பத்மா. பிறகு அதை எடுத்து அடுப்பில் போட்டாள். ஒரு வழியாய் அவளுடைய கோபம் அடங்கியவுடன் நாங்கள் இருவரும் கீழ்க்கண்ட தீர்மானங்களுக்கு வந்தோம். தீர்மானங்களை அவள் குறித்துக்கொண்டாள்.

1. எல்லோருக்கும் ஏமாற்றுக்காரனைப் பற்றிக் கடிதம் எழுதுவது.

2. கடிதத் தலைப்பில் என் படத்தை அச்சிட்டுக் கொள்வது.

3. கதை கேட்டு எழுதுபவர்களைப் படம் போடுகிறீர்களா என்று பதிலுக்கு எழுதிக் கேட்பது.

4. பேச்சாளராகவும் மாறி, கூப்பிடுகிற ஊர்களுக்கெல்லாம் போய், நம்மைக் கூட்டங்களில் விளம்பரப் படுத்திக்கொள்வது.

5. வெளியூர்களில் அரிச்சந்திரன் என்று சொல்லிக் கொண்டு பகிரங்கமாக உலவுவது.

6. முன்பின் தெரியாதவர்களிடம் உஷாராய்ப் பழகுவது. சந்தேகப்படக்கூடியவர்களிடம் அதிகமாய்ச் சந்தேகப்படுவது.

நாட்கள் சென்றன. கடிதங்கள் எழுதிப்போட்டேன். ஏமாற்றப்பட்டவர்களும் அங்கங்கே நடவடிக்கை எடுத்துக்கொண்டிருந்தார்கள். மற்றபடி எங்களுடைய மற்றத் தீர்மானங்கள், மகாநாடுகளில் நிறைவேற்றப்படுகிற தீர்மானங்களைப்போல் பத்திரமாக எழுத்தில் இருந்தன

## 4

பத்மாவும் நானும் எங்காவது நாலுநாள் வெளியூரில் போய் நிம்மதியாய்த் தங்கிவந்தால் தேவலாம்போலிருந்தது. கிளம்பினோம். உறவினர்கள், நண்பர்கள் யாரும் இல்லாத ஊராய்ப் பார்த்து வந்து ஒரு ஹோட்டலில் தங்கினோம். ஹோட்டல் முதலாளியிடம் என் பெயரைச் சொன்னபோது, அவருடைய உபசாரம் கொஞ்சம் அதிகமாக இருந்தது. பரிமாறுகிற பையன்களும், மேஜை துடைக்கும் பையன்களும் என்னுடைய அறைப் பக்கம் வந்து, புதிதாய் மிருகக் காட்சிசாலைக்கு வந்த கங்காருவைப் பார்ப்பதுபோல் என்னைப் பார்த்தார்கள். மத்தியான்னச் சாப்பாடு முடிந்தது. மாலை [illegible]

போய்ப் பார்க்கலாம் என்று நினைத்து, பிரயாணக் களைப்புத் தீர இளைப்பாறிக்கொண்டிருந்தோம்.

அறைக் கதவில் நிழல் தட்டியது. யாரோ வாசல் பக்கம் நின்று கைகூப்பினார். வாயில் வெற்றிலைக் காவியும் உடம்பில் கதர் ஜிப்பாவும் ஏறியிருந்தன.

“உள்ளே வரலாமோ? நீங்கள்தானே அரிச்சந்திரன்? ஹோட்டல் முதலாளி சொன்னார்....”

வரவழைத்து நாற்காலியில் உட்காரச் சொன்னேன். வந்தவர் என்னையும் பத்மாவையும் ஒருமுறை உற்றுப் பார்த்தார்.

“கதைகளில்தான் உங்களைச் சந்திக்க முடிகிறதே தவிர, நேரில் பார்க்கவே முடிவதில்லை. உங்களைப் பார்க்க முடிந்ததில் எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? எனக்கு ஒரு நல்ல நாள் ஸார், இது! நீங்களெல்லாந்தான் சொந்தப் பெயர் வேண்டாமென்று புனைபெயருக்குள் ஒளிந்து கொள்கிறீர்களே!”

“பொய்க்குத்தான் இன்றைக்கு நல்ல மதிப்பு!”

“அரிச்சந்திரனாக இருந்து இப்படிச் சொல்லலாமா?”

“உண்மை அரிச்சந்திரனா, கெட்டுப்போவதற்கு?”

வந்த மனிதர் புருவத்தைச் சுளித்தார். என்னை உற்றுப் பார்த்தார். நானும் அவரை உற்றுப் பார்த்தேன். பிறகு பத்மாவின் பக்கம் திரும்பினேன். அவள் கண்களிலும் அதே சந்தேகம். ‘நம்முடைய ஆறுவது தீர்மானம் ஞாபகம் இருக்கட்டும்’ என்று அந்தக் கண்கள் எனக்குக் குறிப்பாய்ச் சொல்லின.

நான் அவரை லேசில் விடுவதாக இல்லை.

“என்னுடைய கதைகளை நீங்கள் படித்ததுண்டா? எந்தக் கதை உங்களுக்குப் பிடித்திருக்கிறது? எது பிடிக்கவில்லை? ஏன்?”

...வர் யோசனை செய்தார். பிறகு தடுமாறி ...ழுதுகிற கதையைவிட நாடகமும் கவிதை

யுந்தான் எனக்கு ரொம்பப் பிரியம். உங்களைப் கவி எழுத இந்த நாட்டில் இன்னொருவன் பிறந் வேண்டும்.''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''கவிதையா? அந்தப் பக்கம் நான் தலை வை கூடப் படுத்ததில்லையே! ஐயா, நீங்கள் யார்? உங்க என்னிடம் என்ன வேண்டும்? எதற்காக இங்கே தீர்கள்?''

''நீங்கள் யார்? உங்களுக்கு இங்கே என்ன வே எதற்காக வந்தீர்கள்?''

''கேட்கத் தேவையில்லை; நீங்கள் போகலாம்.''

''போக முடியாது! எனக்கு இங்கே வேலை இ கிறது. அரிச்சந்திரன் பெயரைச் சொல்லி எத்தனை ஊ எத்தனை பேரை ஏமாற்றியிருக்கிறாய்? நயவஞ்சகம பேசி நல்லவர்களையும் ஏமாளிகளையும் மோசம் செ வன் தானே நீ? நான் இந்த ஊர்ப் போலீஸ்!''

வந்தவர் 'மப்டி'யில் வந்த 'எட்'டையா எ பின்னால் தெரிந்தது. அவர் கை தட்டினார். இர ஜவான்கள் வந்து தயாராய் எனக்கு இரண்டு பக் நின்றார்கள்.

சப்-இன்ஸ்பெக்டர் என் கதைகளை நிறையப் படித் தவர். அவருக்கு என்னை நம்பவும் முடியவில்லை; நம்பாம லும் இருக்க முடியவில்லை. ஆனால் மரியாதையோடு பேசினார்; மதிப்போடு நடந்துகொண்டார். அரிச்சந்திரன் மேலிருந்த உண்மையான அன்பினால்தான் அவருக்கு என்மீது அதிகச் சந்தேகமாம்!

கடைசியில் சப்-இன்ஸ்பெக்டர் டெலிபோனில் எங்கோ பேசிவிட்டு வந்து, ''அரிச்சந்திரனின் எழுத்து நடை எனக்குத் தெரியும். நீங்கள் உடனே ஒரு சிறுகதை எழுதுங்கள், நான் நம்புகிறேன்'' என்றார்.

கதை முடியும் சமயம்.

"அரிச்சந்திரன்! எழுதிவிட்டீர்களா?"

எனக்குப் பழக்கமான குரல் அது. திரும்பிப் பார்த் . பத்திரிகாசிரியர் பரமசிவம் இரும்புக் கம்பிக்கு யே நின்றுகொண்டிருந்தார். என்னால் எதையும் முடியவில்லை. சென்னையில் இருந்த பத்திரிகாசிரியர் எங்கே வந்தார்? நடப்பது உண்மையா? கற்ப ா? நான் அரிச்சந்திரன்தானா? அவள் பத்மாவா லது சுசீலாவா?

லாக்-அப் கதவு திறந்தவுடன் சப்-இன்ஸ்பெக்டர் வும் அன்போடு தம் வருத்தத்தைத் தெரிவித்தார். மையைச் செய்வதில் உள்ள கஷ்டங்களைச் சொன்னார். திரிகாசிரியரை அவருக்கு நன்றாகத் தெரியுமாம். த்த ஊர் இலக்கியக் கழகத்திற்கு வந்திருந்தவரை ் போன்மூலம் செய்தி அனுப்பி வரவழைத்தாராம்.

"உங்களுக்குத் தெரியுமா? நாங்கள் எப்படியும் லிப் பேர்வழியைப் பிடித்துவிட்டோம். அடுத்த ஊர்ப் லீஸிடமிருந்து இரண்டு நிமிஷத்திற்கு முன்புதான் வல் வந்தது" என்றார் சப்-இன்ஸ்பெக்டர்.

பரமசிவம் சிரித்தார். அவருக்குக் காரியத்தில் கண். சிறுகதையைக் கையில் வாங்கிக்கொண்டே, "இவரை ஒரு மாதமாவது லாக்-அப்பில் போட்டிருந்தால் ஒரு நாவல் கிடைக்குமே!" என்றார்.

# பையனும் பெண்ணும்

நடந்துவிட்டது என்னவோ ஒருவிதமான காரியம் தான். அது சில பத்திரிகைகளில் கொட்டை எழுத்துக் களில் வேறு வெளிவந்துவிட்டது. அது இப்போது நாடறிந்த ரகசியம். நான் வேறு இதை எதற்காக எழுது கிறேன் என்று கேட்பீர்கள். இன்னும் கொஞ்சம் தெளிவாக எழுதினுல் சில பையன்களுக்கும் பெண்களுக் கும் உபயோகமாக இருக்கும். பெரியவர்களுக்கும் இதனுல் நஷ்டம் ஏற்படப்போகிறதில்லை.

அந்தப் பையனும் அப்படிச் செய்திருக்கக்கூடாது. பெண்ணும் அப்படி வெளியில் வந்திருக்கக்கூடாது. நடந் தது என்னவோ நல்லவர்கள் வெட்கப்படவேண்டிய காரியம்.

பெண்ணின் தகப்பனுர் பையன்மீது வழக்குப் போட் டிருந்தார்—மானநஷ்ட வழக்கு. பையனின் தகப்பனுர் எதிர்வழக்காடினுர். பெண்ணின் வக்கீல் கட்டாயம் வழக்கு தமது பக்கத்தில்தான் தீர்ப்பாகும் என்று முடிவுகட்டினுர். பையனின் வக்கீலோ கோர்ட்டில் எதிர்த்தரப்பின் மானத் தையும் சுத்தமாக வாங்கிவிட்டு, வெற்றியையும் தமது கட்சிக்காரருக்கே வாங்கித் தருவதாய்ச் சபதம் செய் தார். ஆனுல் இரண்டு தரப்பாருமே வழக்கு என் சாட்சி யத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறதென்பதை ஒப்புக் கொண்டார்கள்.

நான் இந்த வழக்கில் முக்கியமான சாட்சி.

இரண்டு கட்சிக்காரர்களும் என்னைத் தங்கள் தங்கள் பக்கம் இழுக்கப் பார்த்தார்கள். இரண்டு கட்சி வக்கீல் களும் எனக்குப் பாடம் சொல்லிக்கொடுக்க முயன்ருர் கள். "எந்தப் பக்கத்தில் என்னை சாட்சியாய்ப் போட் டுக்கொண்டாலும் சரி; நான் என் இஷ்டத்திற்குத்தான் சொல்வேன். நீங்கள் இரண்டு பேருமே எனக்கு ஒன்று தான்" என்றேன்.

இதைப் பெண்ணின் தகப்பனுர் நம்பவில்லை. ஆரம் பத்தில் என்னிடம் அதிகமாக நெருங்கி வந்தவர், அதி விரைவில் நழுவிவிட்டார். பையனை எனக்கு ஏற்கனவே தெரியுமாதலால் நான் அவன் பக்கம் சாய்ந்துவிடுவேன்

என்று அவருக்குப் பயம். கடைசியில் நான் பையனின் சார்பில்தான் சாட்சிக் கூண்டு ஏறினேன்.

இதோ, நான் கூறிய சாட்சியம்:

கோர்ட்டார் அவர்களே! நான் சொல்வதெல்லாம் நூற்றுக்கு நூறு உண்மையென்று என்னால் சாதிக்க முடியாது. நூற்றுக்கு மேலேகூட உண்மை இருக்கலாம்; அல்லது அதில் கற்பனையும் இருக்கலாம். கற்றறிந்த தங்களுக்குக் கற்பனைக்கும் பொய்க்கும் உள்ள வித்தியாசம் தெரியாமல் இருக்காது. நான் கதை எழுதுகிறவன். கற்பனை இல்லாமல் என்னால் பேசவோ எழுதவோ முடியாது. அது என் பிறவிக் குணம். கொள்ளவேண்டியதைக் கொண்டு, தள்ளவேண்டியதைத் தள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கடவுளறிய நான் சொல்வதெல்லாம் உண்மை; கற்பனை கலந்த உண்மை. ஆனால் கடுகளவுகூடப் பொய் யில்லை!

எனக்கு அந்தப் பையனை - பிரதிவாதியை - முன்பே தெரியும். நான் பிறந்த கிராமத்திற்கு அடுத்த கிராமத்தில் பிறந்தவன். நான் கிராமத்தைவிட்டு முன்பே சென்னைக்கு வந்துவிட்டேன். அவன் இப்போதுதான் வந்திருக்கிறான். நான் இங்கு வந்ததில் இரண்டு நோக்கங்கள் உண்டு. ஒன்று, பத்திரிகைகளில் பக்கங்களை நிரப்புவது; மற்றொன்று, என் வயிற்றை நிரப்புவது. அவன் இங்கே வந்தது, கல்லூரியில் படித்து மூளையை நிரப்பிக்கொள்ளத்தானாம்.

மயிலாப்பூர் மந்தைவெளியிலுள்ள என் அறைக்கு அவன் என்னைத் தேடிக்கொண்டு வந்தான். நான் அப்போது தலைகீழாக நின்று சிரசாசனம் பழகிக்கொண்டிருந்தேன். புலனடக்கத்தை உத்தேசித்து நான் இந்த ஆசன முயற்சியில் இறங்கியிருக்கிறேன். நிறையச் சம்பாதித்த பிறகு கல்யாணம் செய்துகொள்ளவேண்டுமென்ற எண்ணம். அதுவரையில் கட்டுப்பாடு அவசியமல்லவா....? அதிலும் சென்னை போன்ற நகரத்தில்!

பையனைப்பற்றி நான் சொல்லவேண்டுமா என்ன? நீங்களே உங்கள் கண்ணெதிரில் பார்க்கிறீர்கள். வாட்ட சாட்டமாய், உருண்டு திரண்டு வளர்ந்திருக்கிருன். ஓட்டப் பந்தயம், நீச்சல் போட்டி, உயரத் தாவுதல் எல்லாவற்றிலும் அவனுக்கு முதல் பரிசாம்! கிராமத்தின் முரட்டுத்தனத்தை இந்தப் பட்டணத்துப் 'பௌடர்' மறைத்திருக்கிறது என்ருலும் சரியாக மறைக்கவில்லை.

என் அறைக்கு அவன் வந்த சமயம் கையில் ஒரு யோகாசனப் புத்தகம் கொண்டுவந்திருந்தான். அத்துடன் அவனேடு படித்த இதர மாணவர்களையும் அவன் வாயில் வந்தபடி திட்டினுன். பெண்களைப் பொறுத்தவரை, அவர்கள் காலிக்கூட்டத்தைவிடக் கேவலமாக நடந்துகொள்ளு கிருர்களாம். தங்கை தாய் உள்ளவர்கள் என்பதை மறந்துவிடுகிருர்களாம்.

இந்தச் ச்மயத்தில் வாதி வக்கீல் குறுக்கிட்டார். "இது எதிரியை நல்ல பையனுகச் செய்யும் முயற்சி. இதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன். எழுத்தாளர், கதை சொல்லாமல், கண்டதை மட்டும் சொன்னுல் நன்ருக இருக்கும்.''

நான் காதில் போட்டுக்கொள்ளவில்லை; தொடர்ந் தேன்:

பையன் வைத்திருந்த புத்தகமும் அவன் பேச்சும் எனக்குப் பிடித்திருந்தன. நான் எழுதுகிற கதைகளும் போடுகிற ஆசனங்களும் அவனுக்குப் பிடித்திருந்தன. தனக்குக் கதை எழுதவும் ஆசனம் போடவும் கற்றுத் தரச் சொன்னுன். கதை எழுதக் கற்றுக்கொண்டாலே ஆசனம் போடுகிற அவசியம் தன்னுல் ஏற்பட்டுவிடும் என்றேன்; ஒப்புக்கொண்டான்.

சினிமா 'ஷூட்டிங்' அவன் பார்த்ததில்லையாம். அதைப் பார்க்கவேண்டுமென்று - உடனே பார்க்கவேண்டு மென்று - ஒற்றைக்காலில் நின்ருன். இன்னும் அவனுடைய ஆசைகள் என்னென்ன என்று விசாரித்தேன். 'முதலில் படத்தில் நடிக்கவேண்டும்; அடுத்தாற்போல் கூட்டத்தில் பேசவேண்டும்; கடைசியில் மந்திரியாகவேண்டும்.'—

அந்த ஆசைகளை வாழ்த்தினேன். எல்லோரும் இந்நாட்டு மன்னர்களில்லை; மந்திரிகள்!

பையனுடைய தொந்தரவு பொறுக்கமுடியாமல் அவனைக் கோடம்பாக்கத்திலுள்ள திரை-உலகத்திற்கு அழைத்துக்கொண்டு கிளம்பினேன். புறப்படும்பொழுது விளக்கு வைக்கும் நேரம். மழையும் வரும்போல் தோன்றியது. குடையை எடுத்துக்கொண்டு அவனுடன் நடந்தேன். பஸ் நிற்கும் இடத்திற்கு ஒரு பர்லாங் தூரம் நடக்கவேண்டும்.

மழைத் தூற்றல் தொடங்கியது. எங்களுக்கு எதிரில் பத்தடிக்கு முன்னால் ஒரு அழகி போய்க்கொண்டிருந்தாள். அழகி என்று அவளுடைய உடையழகையும் பின்னழகையும் பார்த்துவிட்டுச் சொல்கிறேன். முன்னழகு தெரியாது.

பையன் அவள் முதுகையே பார்த்துக்கொண்டு நடந்தான். வழவழப்பான கண்ணாடிச் சேலையை அவள் கட்டிக்கொண்டிருந்தாள். கொசுவலையைவிடக் கொஞ்சந் தான் மெல்லியது. அந்த வழவழப்பு வழுக்கி விழாமல் எப்படித்தான் இடுப்பில் ஒட்டிக்கொண்டிருந்ததோ தெரியாது. அவள் மேலே போட்டுக்கொண்டிருந்தது ஜாக்கெட்டோ, ஜம்பரோ, சோளியோ அல்லது வேறெதுவோ நான் அறியேன்! நான் பிரமச்சாரி.

குஞ்சம் மாதிரி சேலைத் தலைப்பு ஒருபுறம் தொங்க, அவள் முதுகு கவர்ச்சிகரமாகக் கண்களுக்கு விருந்தளித்தது. இடுப்புக்கு மேலே நாலு அங்குலம் வரை, ஜாக்கெட் நிறத்தில் அவள் சாயம் பூசியிருந்தாள். முதுகுத் தண்டு நடுமத்தியில் கச்சிதமாகத் தெரிந்தது. நான் ஏன் இதைக் கவனிக்கவேண்டுமென்று கேட்பீர்கள். எனக்குப் புலனடக்கத்தில் தீவிர நம்பிக்கை. அத்துடன் நான் உயிருள்ள பிராணிகளைப் பார்த்துக் கதை எழுதுகிறவன். அவளை ஒரு கதாபாத்திரம் என்ற முறையில் பார்த்தேனே தவிர, என் கதாநாயகர்களைக்கூட நான் அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்கமாட்டேன். பையன் என்னவோ வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டு வந்தான்.

'யார் இந்தப் பெண்? சினிமா நட்சத்திரமா? காலேஜ் மாணவியா?'

'அவள் பெண்ணு, கிழவியா என்பது திரும்பினல் தான் தெரியும். நட்சத்திரங்களும் மாணவிகளும் இப் போது ஒன்றுதான். நட்சத்திரங்கள், மாணவிகளாகப் பார்க்கிருர்கள்; மாணவிகள், நட்சத்திரங்களாகப் பார்க் கிருர்கள்' என்றேன்.

மழைத் தூற்றல் சற்றுப் பெரியதாக விழுந்தது. அவளுடைய கண்ணுடித் துணி, உடம்பெல்லாம் புள்ளி புள்ளியாய் ஒட்டிக்கொண்டது. பையனுக்கு இருந்த ஆத்திரத்தில் எங்கே என் கையிலிருந்த குடையைப் பிடுங்கி, அவளைக் காப்பாற்றத் துணிந்துவிடுவானே என்று பயந்தேன்!

'யோகாசனப் புத்தகத்தை நனையாமல் பார்த்துக் கொள்' என்றேன். மறைமுகமாக அவனுக்குப் புலனடக் கப் போதனை செய்வதாக எண்ணம்!

புத்தகத்தை அவன் இறுக்கிப் பிடித்தான். ஆனல், கண்களை இறுக்கிப் பிடிக்கவில்லை. பையனின் கால் களுக்குப் புத்துணர்ச்சி பிறந்துவிட்டது. அது ஓட்டமா, நடையா ....?

நடைவேகத்தின் அதிர்ச்சி கண்டு அவள் திரும்பிப் பார்த்தாள். வயதில் குறைவு; அழகில் நிறைவு. அவ ளுடைய அழகை நான் வர்ணிக்கத் தொடங்கினல் நீங்கள் தப்பாக நினைத்துக்கொள்வீர்கள். கலைஉணர்ச்சி என்று நம்பமாட்டீர்கள். நான் பிரமச்சாரி. பெண் இங்கே இருப் பதால் நீங்களே பார்த்துக்கொள்ளலாம். அந்த அலங் கோலத்தில்கூட அவள் அழகு குறையவில்லை. பேரழகி!

கோடம்பாக்கம் பஸ்ஸுக்குக் காத்துக்கொண்டிருந் தோம். அதற்கு எவ்வளவு நேரம் தவம் கிடக்கவேண்டு மென்று உங்களுக்கும் தெரியும்; அந்த வடபழனி ஆண் டவனுக்கும் தெரியும். அவள் நனைந்துகொண்டிருந்தாள். பையன் குடையைப் பிடுங்கிக் கொடுக்கப்பார்த்தான். நான் விடவில்லை. பட்டணத்து நாகரிகத்துக்குப் பழக்கப்

படாத கிராமத்துப் பிராணியுடன் வெளியில் வந்தது எனக்கு மரியாதைக் குறைவாய்ப் பட்டது.

பையனிடம் பேச்சுக்கொடுத்து அவன் பார்வையை என் பக்கம் திருப்பப் பார்த்தேன்; முடியவில்லை. கடைசியில் என் மனத்தை என் பக்கம் திருப்பிக்கொண்டால் போதுமென்றாகிவிட்டது. இமயமலை சுவாமிகளிடமிருந்து தபாலில் கிடைத்த மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினேன். நூற்றெட்டு முறை இடையில் விட்டு விட்டு, ஜபித்தாயிற்று. பாவம்! அவள் மழையில் நனைந்தே போய் விட்டாள். கழுத்துப் பட்டை விரிவாகத் தெரிந்த அவள் சிவப்பு ஜாக்கெட்டின்மேல் அந்தக் கொசுவலை இருந்ததா இல்லையா?

என்னுடைய மந்திரத்துக்கும் அவளுடைய உடை அலங்காரத் (அல்லது கோலம்)திற்கும் மௌனமாகப் போராட்டம் நடந்தது. பையனிடமோ என்னுடைய தற்காப்புக்கு உதவிய மந்திரக் கவசங்கூட இல்லை. அதிலும் அவன் இங்கிதம் அறியாத கிராமவாசி. இயற்கையின் நெருப்பு நிறைந்த இந்தத் தமிழ்நாட்டில் பிறந்தவன்.

இந்தக் கட்டத்தில் வாதி வக்கீலுக்குப் பிரமாதக் கோபம் வந்துவிட்டது. எழுந்துநின்று கர்ஜித்தார்:

"கௌரவமான குடும்பத்தின் உயர்வான பெண்ணைப்பற்றி இவர் இழிவாகப் பேசுகிறார். பெண்ணின் நோக்கத்தில் அப்பழுக்குச் சொன்னால் அவர்கள் நாக்கு வெந்துவிடும். இந்தக்காலத்து நாகரிகத்தை ஒட்டி அவள் உடுத்துக்கொண்டாளே தவிர, எதிரியை மயக்குவதற்காக அல்ல! இதைக் கோர்ட்டார் கூர்ந்து கவனிக்க வேண்டுகிறேன்."

"நானும் அப்போது கூர்ந்துதான் கவனித்தேன்: என்றால் கவனிக்காமல் இருக்கமுடியவில்லை" என்றேன். அத்துடன், "நினைவுச் சுதந்திரம் எல்லோருக்கும் உண்டு. வேண்டுமானால் இப்படி உடுத்துகிற பெண்கள் தங்களுடன் ஒரு வக்கீலையும் மறவாமல் அழைத்துக்கொண்டு வரட்டும். நோக்கத்தில் தவறில்லை என்பதைப் பார்ப்பவர்

களிடம் அவர்கள் எடுத்துச் சொல்லி வாதாடிக்கொண்டு வரலாமல்லவா?''

கோர்ட்டில் குபீரென்று சிரித்தார்கள்; நீதிபதி அமைதி கோரி மேஜையில் தட்டினர். கோர்ட்டின் ஒரு மூலையில் நின்றுகொண்டு அந்தப் பெண் என்னைத் தன் கண்களால் கொன்ருள்.

நான் தொடர்ந்து பேசினேன்:

விளக்கு வைத்தவுடன் பஸ்ஸும் வந்து சேர்ந்தது. நான் அந்தப் பையனின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு உள்ளே போய் உட்கார்ந்தேன். ஆபத்து அத்துடன் ஒழிந்தது என்று பெருமூச்சு விடப்பார்த்தேன். என்ன ஏமாற்றம்! எங்களுக்கு நேர்எதிரில் அவள் வந்து உட்கார்ந்தாள். பஸ்ஸிலும் வேறு இடம் இல்லை.

நல்ல வேளை, கடவுள் என்னை மட்டும் காப்பாற்றினர். அவர் என்னுடைய நண்பர் கணேசனின் உருவத்தில் வந்து என்னிடம் பேச்சுக்கொடுத்தார். பின்புறம் கணேசனிடம் திரும்பி நான் பேசத் தொடங்கினேன். எல்லா விஷயங்களையும் பற்றிப் பேசினேம்.

இடைஇடையே நான் பையனைக் கவனித்தேன். அவன் என்னைக் கவனிக்கவில்லை; பெண்ணைக் கவனித்துக் கொண்டிருந்தான்! அதற்காக அவளும் சளைக்கவில்லை!

வாதி வக்கீல் குதித்தெழுந்தார்: "இது அக்கிரமம்!''

பிரதிவாதி வக்கீல் மறுப்பு விட்டார்: "எது அக்கிரமம்?''

"தன்னை ஒரு அயோக்கியன் ஏன் அப்படி உற்றுப் பார்க்கிருன் என்றுதான் அந்தப் பெண் பார்த்தாள், வேறென்றுமில்லை.''

"தன்னிடம் ஒரு அப்ஸரஸ் கண்களால் பேசுவதாகவே என் கட்சிப் பையன் நினைத்துவிட்டான். வேறென்றுமில்லை.''

நான் சுருக்கமாக என் சாட்சியத்தைத் தொடர்ந்து முடித்தேன்:

கோடம்பாக்கம் பஸ்ஸில் ஏறினல், அது வடபழனிக்குத்தான் போகிறதா—இல்லே, நேரே பழனி மலேக்குத்தான் போகிறதா என்று நமக்குத் தெரியாதல்லவா? அத்தனே இடங்களில் நின்று, நிறுத்தி, ஏற்றி, இறக்கி அது நகர்ந்தது. நானும் நண்பரும் மூன்றுமுறை உலகப் பிரச்னேகளே அலசிவிட்டோம். வடதுருவத்துக்கும் தென் துருவத்துக்கும் போய்வந்தோம். பஸ் மட்டும் சென்னேத் தெருக்களில் உருண்டுகொண்டிருந்தது.

கணேசனும் இறங்கிப் போய்விட்டார். நான் யோகாசனப் புத்தகத்தைப் பிரித்து, அதில் உட்டியாண, நௌலி இரண்டையும் ஆராய்ச்சி செய்தேன். வயிற்றைப் பற்றிய பயிற்சிகள் ஆதலால் பஸ்ஸில் போய்க்கொண்டே கூடச் செய்யலாம். மற்றவர்களுக்குத் தெரியாது. சட்டைக்குள்தானே வயிறு இருக்கிறது?

பஸ் ஏதோ ஒரு இடத்தில் நின்றது. திடீரென்று என்னே இடித்துத் தள்ளிக்கொண்டு எழுந்தான் பையன். சரசரவென்று, என்னேத் திரும்பிக்கூடப் பாராமல், இறங்கத் தொடங்கினன் அவன். அதற்குள்ளாகவா இறங்கவேண்டிய இடம் வந்துவிட்டது? நானும் அவசரமாக இறங்கினேன். அவனுக்கு முன்னுல் அந்தப் பெண் வேகமாய்ப் போய்க்கொண்டிருந்தாள்.

கீழே இறங்கிய பிறகுதான் அது கோடம்பாக்கம் ரெயில்வே கேட் என்று தெரிந்தது. இன்னும் அரை மைலுக்குமேல் இருந்தது, நாங்கள் இறங்கவேண்டிய இடம். நான் ஒருகணம் ஒன்றும் புரியாமல் நின்றேன். அதற்குள் பஸ்ஸும் புறப்பட்டுவிட்டது. பையனும் புறப்பட்டுவிட்டான், அவள் பின்னுல்!

எல்லாம் கண்மூடித் திறக்கும் நேரத்திற்குள் நடந்துவிட்டது.

எப்படி நடந்ததென்று எனக்குத் தெரியாது.

தெரியவே தெரியாது!

அவளுடைய சடைப்பின்னல் அவன் கையிலிருந்தது! —நான் பார்த்துக்கொண்டுதான் நின்றேன்.

நான் எழுத்தாளன். எதற்கெடுத்தாலும் எனக்குக் கற்பனைதான் முன்னால் வந்து நிற்கும். மகாகவி பாரதியின் பாடல் அப்போது எனக்கு நினைவில் வந்தது....

*'பின்னலைப் பின்னின் றிழுப்பான்—கண்ணன்*
*தீராத விளையாட்டுப் பிள்ளை!'*

மகாகவியின் சொற்சித்திரத்தை இந்தப் பையன் செயல்சித்திரமாக்குகிறானே! என்ன அற்புதம்! என்ன துணிவு!

ஆனால், என்னைபோல் கவிதைஉள்ளமோ. ரசிகத் தன்மையோ அங்கு யாருக்கும் இருந்ததாய்த் தெரியவில்லை. அவள் 'ஓ'வென்று பயங்கரக் கூச்சலிட்டாள். அரைக்கணத்தில் தெருவே கூடிவிட்டது. அந்தப் பையனைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை. கூட்டத்திடம் அகப்பட்டுக்கொண்டு அவன் பட்ட பாடு!

ஆளுக்கொரு அறை, ஆளுக்கொரு குத்து, ஆளுக்கொரு உதை! முகம் வீங்கிப்போய் அவன் மூக்கிலிருந்து ரத்தம் கொட்டியது. கோர்ட்டாரவர்கள் அந்தப் பையனின் பல்லைக் காட்டச் சொல்லிப் பார்த்தால், அதில் முன் பல் இரண்டும் காணாமற்போயிருப்பதைக் காணலாம். அந்தத் தெருவில்தான் அதைத் தேடிப் பார்க்க வேண்டும்.

இந்தக் கட்டத்தில்தான் நான் என் சுயநினைவுக்கு வந்தேன். கற்பனை பறந்துவிட்டது. அவனுக்குப் பரிந்து போய் அநாவசியமாக என் முன்வரிசைப் பற்களையும்....? ஆகவே, அப்போதே நான் என்னைச் சாட்சிக்குத் தயார் செய்துகொண்டேன். எதிலும் பட்டுக்கொள்ளவில்லை.

கோர்ட்டாரவர்களுக்கு யோசனை சொல்லும் உரிமை வக்கீல்களுக்குத்தான் உண்டு. சாட்சிக்குக் கிடையாது. என்றாலும் என் மனதில் பட்டதைச் சொல்லிவிடுகிறேன். இரண்டு பக்கமும் நியாயமும் இருக்கிறது; அக்கிரமமும் இருக்கிறது.

பொதுமக்களே பையனின் முகத்தை வீங்கச்செய்து, அவனுக்குத் தக்க நியாயம் வழங்கிவிட்டார்கள்!

பத்திரிகைக்காரர்களும் செய்தியை வெளியிட்டுப் பெண்ணுக்கு நியாயம் வழங்கிவிட்டார்கள்!

இரண்டு பேருமே திருந்திவிட்டார்கள். பையனும் தன் கண்களுக்கு இப்போது அநாவசியமாய் வேலை கொடுப்பதில்லை. பெண்ணும் இப்போது கொசுவலை யைக் கட்டிக்கொள்வதில்லை. எனவே, இதைக் கோர்ட் டுக்கு வெளியில் அவர்களாகவே கூடிப்பேசித் தீர்த்துக் கொண்டால் நலமாயிருக்கும்.

“கூடாது!”

“கூடவே கூடாது!”

இந்தக் ‘கூடாது’ விஷயத்தில் எதிர்கட்சி வக்கீல்கள் இரண்டு பேரும் ஒன்றுகூடிவிட்டார்கள். நான் கூண்டி லிருந்து இறங்கினேன். பையனும் என்னை வெறித்துப் பார்த்தான்; பெண்ணும் கோபமாய் விழித்தாள்.

வழக்கம்போல் வழக்கு வளர்ந்தது. வழக்கின் போக் கைக் கண்டு பையனின் தகப்பனார் வருந்தாத நாளில்லை. தம்முடைய பிள்ளை சற்புத்திரன் என்றும், மற்ற மாணவர் களுடன் சேர்ந்து அவன் கெட்டுப்போய்விட்டானென்றும் சொல்லிக்கொண்டார். கல்லூரிப் படிப்புக்குப் புள்ளி வைத்தாயிற்று. பையனுக்குச் சிறைத் தண்டனையோ, அபராதமோ கிடைத்தால் என்ன செய்வது! அவமானம் அவமானம்தானே!

பெண்ணின் தகப்பனாரும் தம்முடைய பழைய பிடி வாதத்திலிருந்து இறங்கிவிட்டார். எதிரிக்குத் தண்டனை வாங்கிக்கொடுத்தால்மட்டும் என்ன வரப்போகிறது? இத னால் பெண்ணின் கல்யாணம்கூடக் கொஞ்சம் தாமதப் படலாம். தீர்ப்பு வெளியாகும்போது திரும்பவும் இந்தப் பத்திரிகைகள் முன்கதையை விஸ்தாரமாக வெளியிடத் தான் செய்யும். இந்த வீண்தொல்லை இப்போது தொலைந் தால் போதும்.

நான் என்னுடைய யோசனையைப் பையனின் தகப் பனாரிடம் முதலில் வெளியிட்டேன். அவர் அதை உடனே

ஒப்புக்கொண்டார். பையன் ஆனந்தத்தால் துள்ளிக் குதித்தான்.

பெண்ணின் தகப்பனாரிடம் அதைத் தர்க்கம் செய்து ஒப்புக்கொள்ளச் செய்தேன். பையன் வீட்டாரின் அருமைபெருமைகளை அள்ளி வீசினேன். கதைகளில் எத்தனையோ கல்யாணங்களைச் செய்துவைக்கும் எனக்கு, உண்மையில் ஒரு கல்யாணமாவது செய்துவைக்க வேண்டுமென்று ஆசை. பெண்ணின் தகப்பனார், பெண்ணிடம் ஒரு வார்த்தை கேட்டுச் சொல்வதாக என்னைத் தம் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு சென்றார்.

தகப்பனார் என்னை முன் அறையில் உட்காரவைத்து விட்டு உள்ளே போனார். சற்று நேரத்தில் தமது பெண்ணையே அழைத்துக்கொண்டு வெளியில் வந்தார்.

"இவர் எதற்காக அப்பா மூன்றாவது மனிதருக்குப் பரிந்து பேச இங்கே வரவேண்டும்? கோர்ட்டில் சாட்சி சொல்லிய லட்சணம் போதாதா? இவருக்கு இஷ்டமென்றால் வழக்கைத் தொடர்ந்து நடத்தவேண்டாம். இன்றைக்கே தள்ளுபடி செய்யச் சொல்லுங்கள். ஆனால், அதற்காக நான் போய் அவனைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது."

இப்படிச் சொல்லிவிட்டு என் கதையில் வரும் கதாநாயகி, தன் கதாநாயகனை ஓரக்கண்ணால் பார்ப்பது போல் என்னைப் பார்த்தாள். 'உங்களுக்குத்தான் கல்யாணமாகவில்லையே!' என்று அவள் கண்கள் கேட்டன. தகப்பனாரும் குலம் கோத்திரம் விசாரிக்கத் தொடங்கினார்.

என்ன அதிசயம் இது!

அன்றைக்கு இரவே என் அறை வாடகைப் பாக்கியைக்கூடக் கொடுக்காமல் சென்னையைவிட்டுப் பெட்டி படுக்கையுடன் ரெயிலேறினேன். எங்கே இருந்து கொண்டு வேண்டுமானாலும் கதை எழுதலாமல்லவா? எங்கே இருந்துகொண்டு வேண்டுமானாலும் ஆசனம் போடலாமல்லவா?

# நெருப்பு

“டண் டணக், டணக் டக்!
டண் டணக், டணக் டக்!
பும் பூம்....பூம்!
ணங், ணங், ணங்!....பூம்!”

பறைமேளம், தாரை, தப்பட்டை, சங்கு, சேகண்டி எல்லாம் தனித்தனியாகவும் ஒன்றுசேர்ந்தும் அந்த வீட்டு வாசலில் அலறின. பச்சைப்பந்தல் போட்டுத் தெருவையே அடைத்திருந்தார்கள். பந்தலடியில் நீண்ட பெஞ்சுகளிலும், வீட்டின் பெரிய திண்ணைகளிலும் துக்கம் விசாரிக்க வந்த ஆண்கள் கூட்டம் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தது. செத்துப்போன பையனின் அண்ணு மட்டும் நிலைகுலைந்துபோய்த் திண்ணையின் ஓரத்தில் கிடந்தார். அழுதழுது வீங்கிப்போன முகம்; கட்டிக்கொண்ட தொண்டை; வருவோர் போவோரிடம் முகத்தை மூடிக்கொண்டு விம்மினுர். செத்துப் போன பையன் தணிகாசலம் புது மாப்பிள்ளைபோல் கூடத்தின் மத்தியில் நாற்காலியில் சாய்ந்திருந்தான். ரோஜாப்பூ மாலை முழங்காலுக்குக் கீழ் தொங்கியது. உடம்பில் சலவை கலையாத சில்க் சட்டை; கையில் மோதிரங்களும், தங்கச் சங்கிலி போட்ட கைக்கெடிகாரமும். அவன் செத்துப்போய்விட்டான் என்று சத்தியம் செய்தால்கூட யாரும் நம்பமாட்டார்கள்.

ஆனுல் அவன் செத்துத்தான் போய்விட்டான்.

பெண்கள் கூட்டம் அவனைச் சுற்றிக்கொண்டு ஒப்பாரி வைத்தது; மாரடித்தது; மூக்கைச் சிந்தி சுவரில் போட்டுவிட்டுத் திரும்பத் திரும்ப ஓலமிட்டது. புதிதாக யாரும் கேட்க வந்துவிட்டால் குபீரென்று அதன் அழுகை ஒன்பது மடங்கு உயர்ந்தது.

பையனுக்கு அண்ணு எப்படித் திண்ணையில் கிடந்தாரோ அதேபோல் அண்ணி உள்ளே கூடத்தில் கிடந்

தாள். அழவந்த பெண்கள் அவளைப் போட்டு வாட்டி எடுத்துவிட்டார்கள். அத்துடன் அவளுடைய ஆர்ப்பாட்டமும் சொல்லி முடியாது. புரண்டு புரண்டு அழுதாள்: தலையைத் தரையில் முட்டிக்கொண்டாள்; மோதிக்கொண்டாள். அவளுடைய தாய்க்கிழவி எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் அண்ணி கேட்கவில்லை.

பையனுக்கு என்ன, பாடையில் போகிற வயதா அது? தணிகாசலத்துக்கு இன்னும் முப்பது முடியவில்லை. இரும்பைப்போல் தேகம்; குணத்தில் ஒன்றும் கோளாறில்லை. குனிந்த தலை நிமிராமல்தான் தெருவில் நடந்து போவான். அக்கம்பக்கத்தார்களுக்கு அவன் தங்கமான பிள்ளை. கல்யாணந்தான் இன்னும் நடக்கவில்லை. இரண்டுமூன்று குழந்தைகளுக்குமேல் தகப்பனாகி இருக்க வேண்டியவன்.

நேற்று இந்நேரம் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தவன் இன்றைக்கு இந்நேரம் இப்படியாகிவிட்டான். தலைவலி என்று சொல்லி இரவில் படுக்கப் போனது உண்மை. அதிகாலையில் எல்லாமே முடிந்துவிட்டது. நெஞ்சடைப்பு என்று வைத்தியர் சொன்னார். வேறு சிலர் வேறு என்னவோ சொல்லிக்கொண்டார்கள்.

எதற்காக இந்த அண்ணி இப்படி ஒப்புக்கு மாரடித்தாளோ தெரியாது. காலாகாலத்தில் அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்காதபடி தன் கணவனைத் தடை செய்தாளே, அதற்காகவா? பெற்றோரற்ற அந்தப் பிள்ளையின் வயிற்றுக்கு வஞ்சனை பண்ணி, அவனைக் கொடுமைக்கு ஆளாக்கி வளர்த்துவிட்டாளே, அதற்காகவா? அவன் ஆண்பிள்ளையாகிச் சம்பாதித்த காசையெல்லாம் தம்படி விடாமல் கறந்து வாங்கினாளே, அந்தக் காசு இனிக் கிடைக்காதென்று?

இரண்டு வருஷங்களுக்கு முன்புதான் அண்ணி அவனுடைய கல்யாணப் பேச்சை முதன்முதலாக எடுத்தாள். ஏனோ அவன் கண்டிப்பாக மறுத்துவிட்டான். அவளுக்கும் அது நல்லதாகப் போய்விட்டது. 'அவனுக்கே இஷ்ட

மில்லே; நாங்கள் என்ன செய்வது?' என்று ஊர் வாயை மூடத் தொடங்கினுள்.

அண்ணியின் நாடகமெல்லாம் இப்போது அம்பலத்துக்கு வந்துவிட்டது. ஒப்பாரி வைக்கிற சாக்கில் மற்றப் பெண்கள் அவளை ஊசி போட்டுத் துளைத்தெடுத்தார்கள். அவளே மருந்து வைத்துப் பையனைக் கொன்றுவிட்டாள் என்றுகூட ஒருத்தி கவி கட்டினுள்.

தெருவில் யாரோ நீண்ட குரலெடுத்துக் கதறிக் கொண்டு ஓடிவருகிற சத்தம் கேட்டது. அந்தக் குரல் கேட்டுத் திண்ணையும் பந்தலுமே உருகின. ஈரல்குலையைப் பற்றி வெளியே இழுக்கும் துன்பக் குரல்.

தலையை முக்காடிட்டுக்கொண்டு ஒரு பெண், சுழற் காற்றுப்போல் உள்ளே நுழைந்தாள்.

"ஐயோ, ராஜா! என்னை விட்டுட்டுப் போயிட்டிங் களே, ராஜா! என் ராஜா!...."

இந்த ஒற்றைக் குரலைத் தவிர மற்ற எல்லாக் குரல் களும் அப்போதைக்குச் செத்துவிட்டன. ஒப்பாரியை ஒழித்து, பெண்கள் இவளைப் பிரமிப்போடு உற்றுப் பார்த் தார்கள். ஆண்கள் கூட்டத்திலும் பேரதிர்ச்சி. ராஜா என்று உரிமையுடன் அவனை அழைக்கும் அவள் யார்?

தலையில் முக்காடு போட்டிருந்ததால் ஆண்களுக்கு அவள் யாரென்று தெரியவில்லை.

"ஐயோ, என் ராஜா!...."

பெண்களைத் தாண்டிக்கொண்டு அவள் தன் ராஜா விடம் போகத் துடித்தாள். தணிகாசலத்தின் காலடியில் போய்விழ இருந்தவளின் முன் ஓர் முட்டுக்கட்டை தோன் றியது. அண்ணியின் தாய் வந்து அவளைத் தடுத்தாள். அதற்குள் அண்ணியே வந்துவிட்டாள்.

தடைகளைச் சட்டைசெய்யவில்லை அந்தப் பெண். தலைவிரி கோலமாய்த் தரையில் புரண்டு அவனுடைய கால்களைப் பற்றப்போனுள். பற்றப்போன மென்கரங் களை முறித்து இழுத்தாள் வீட்டுக்காரி.

தாயும் மகளும் அவளை வெளியில் தள்ளப் பார்த்தார்கள்.

"யாரடி நீ?"

"நானா? என் ராஜாவுக்குத் தெரியும்; உனக்கும் தெரியும். —தெரியாது என்னை?"

பெண்கள் அவளை வியப்போடு பார்த்தார்கள். யார் இந்தப் பெண்? அடடே! மேலத்தெரு ரஞ்சிதமா? அவள் எங்கு இங்கே வந்தாள்?

கண்ணியமான குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவள் தான் ரஞ்சிதம். காசு பணத்திலும் குறைவில்லை. ஆனால் கன்னிப் பருவத்திலேயே வெறுங் கழுத்தாய்ப்போய் வீட்டிலிருப்பவள். தகப்பனாரும் சமீபத்தில்தான் காலமானார். தாயார் இருக்கிறாள்; தம்பி கல்லூரியில் படிக்கிறான்.

தணிகாசலம் வைத்து நடத்திய சைக்கிள் சாமான் கடை அந்த வீட்டிற்கு அடுத்தாற்போல்தான் இருக்கிறது.

பெண்களில் சிலருக்கு விஷயம் புரிந்துவிட்டது; சிலருக்குப் புரியவில்லை; சிலர் தங்களுக்கு முன்பே இருந்த சந்தேகத்தைத் தீர்த்துக்கொண்டார்கள்.

"அடிப்பாவி! இவள்தானா? நல்ல பெண்ணாச்சே!"

"இதுவரை வாழாதவள், இப்போ வாழ ஆசைப்பட்டதிலே என்ன தப்பாம்!"

"பையனும் நல்லவன்தான்; இவளும் பச்சைக்கிளி மாதிரி...."

"அண்ணன்காரன் கல்யாணப் பேச்சையே எடுக்காமல் கண்ணை மூடிக்கிட்டிருந்தால் அவன் என்னதான் செய்வான்?"

"மனசு கேட்குமா? மானஅவமானத்தை விட்டு ஓடி வந்திட்டா பார்!"

"என்னமோம்மா, இந்த அண்ணிக்காரி தாலி ஒண்ணைக் கழுத்திலே போட்டுக்கிட்டுத் தர்மபத்தினி வேஷம் போட்றதுக்கு இது ஒண்ணும் குறைஞ்சுபோகல்லே!"

பெண்களின் கசமுசப் பேச்சுக்கள் ஒருபுறம் தொடங்குவதற்குள் அங்கு ரணகளமே நடந்துவிட்டது. அண்ணியும் அவளைப் பெற்றவளும் சேர்ந்து ரஞ்சிதத்தின் தலைமயிரைப் பற்றி வெளியே தள்ளிக்கொண்டிருந்தார்கள். ரஞ்சிதம் திமிறிக்கொண்டு அவனிடம் போக முயன்றாள்.

“போடி, வெளியே! இங்கே உனக்கு என்ன வேலை? வெட்கங்கெட்டவள்!”

“போடீண்ணு....”

“போக முடியாது! என் ராஜாவைப் பார்க்காமல் போகமாட்டேன்.”

“ராஜாவாம் ராஜா! தாலி கட்டின புருஷன் கெட்டுப் போயிட்டான்!”

“ஆமாம்; தாலி கட்டின புருஷன்தான்; இதோ பார், இது என் ராஜாவோட தங்கக் கையாலே கட்டினது.”

கழுத்திலிருந்த சங்கிலியை அவள் வெடுக்கென்று வெளியே பற்றி இழுத்தபோது அதன் மத்தியில் ஓர் வண்ணத் தாலி மின்னியது. அத்தனைபேர் நெஞ்சுகளிலும் சரேலென்று ஓர் மின்சார அலை.

“ஏண்டி! சொத்திலே பங்கு கேட்கவா வந்திட்டே?” என்று கத்தினாள் அண்ணி.

“ஒரு பங்கும் எனக்கு வேண்டாம். அவரோட கைச் சங்கிலி, அந்த மோதிரம், கடிகாரம் எல்லாம் நான் வாங்கிப் போட்டது. நீயே எல்லாச் சொத்தையும் எடுத்துக் கொள். எனக்கு அவரை மட்டும் கொடு; அவர் எனக்குத் தான் சொந்தம்.”

சிலர் அந்தப்பக்கமும், சிலர் இந்தப்பக்கமும் சேர்ந்தார்கள். கடைசியில் அண்ணியின் கட்சிதான் வென்றது. அவள் அந்த வீட்டின் சொந்தக்காரி அல்லவா?

ரஞ்சிதம் கூடத்தைவிட்டு வெளியே தள்ளப்பட்டாள்.

அத்தனை சோகத்திலும் அவள் அழகு குலையவில்லை. தலைமயிர் நெளிநெளியாக நெற்றியில் புரண்டது. அழுதழுது வீங்கி, கண்கள் செவ்வல்லி மொட்டுக்கள் போல் சிவப்பேறிக் கிடந்தன. பெருங்காற்றில் நடுங்கும் ரோஜாவாக அவள் இதழ்கள் நடுங்கின.

தணிகாசலத்தின் அண்ணனை நெருங்கினாள் ரஞ்சிதம்.

"ஐயா, கடைசியா என்னோட ஆசையைக் கெடுக்காதீங்க ஐயா! இனி அவர் உயிரோட வந்து என்னிடம் பேசவா போறார்? நான் அவருடைய பெண்டாட்டி, ஐயா! அவரைப் போய்ப் பார்க்கக்கூடாதா?"

சுற்றியிருந்த ஆண்களுக்கு இது பரிதாபமாக இருந்தது. என்றாலும் யாருக்கும் எதுவும் சொல்லத் துணிவில்லை. கூட்டத்தில் இருந்த ஓர் கிழவர் மட்டும், "ஏன் தம்பி, பார்த்தால் என்ன? உன் வீட்டுக்காரியிடம் சொல்லேன்" என்றார்.

அண்ணி இதைக் கேட்டுக்கொண்டுதான் நின்றாள். அவளுக்கு ஆத்திரம் தாங்கவில்லை.

"ஏண்டி! தம்பியை மயக்கினது போதாதென்று அண்ணனையும் மயக்க வந்திட்டியோ? ஊராருக்கு எதுக்கு இந்தக் கவலை? யாரும் இதிலே தலையிட வேண்டாம்."

அண்ணன் பெட்டிப் பாம்பானார். ஆண்கள் வெட்கித் தலைகுனிந்தார்கள்.

"இதோ பார்! இதுவரை என் ராஜாதான் செத்துப் போனதா நினைச்சேன். இப்போ தெய்வமே செத்துப் போச்சு! நீ என் புருஷனுக்குச் செய்த வஞ்சகம், உன்னைக் கட்டினவனுக்குச் செய்த துரோகம், நீ ஒவ்வொரு நாளும் செய்கிற அக்கிரமம் எல்லாமே எனக்குத் தெரியும். என் ராஜா உன்னைப்பத்திக் கதையாச் சொல்லியிருக்கார். நான் அவருக்குத் தாயாகவும் இருந்தேன்; தாரமாகவும் இருந்தேன். அடுத்த மாசம் நாங்க தனிக் குடித்தனம் நடத்த இருந்தோம். அதுக்குள்ளே கடவுளுக்குப் பொறுக்கல்லே. ஒருவேளை நீதான் அவர் பங்குச்

சொத்துக்கு ஆசைப்பட்டு இப்படிச் செய்தியோ, என்னமோ! தெய்வம் இருந்தால் அது நீ வாழவும், அவர் சாகவும் பார்த்துக்கிட்டிருக்குமா?''

அண்ணிக்கு இதற்குமேல் பொறுக்கவில்லை.

''நீங்க ஆண்புள்ளைதானு, இந்த வேசியைத் திட்டச் சொல்லி என்னைப் பார்த்துக்கிட்டிருக்கிங்களே!''

அண்ணனுக்கு உண்மையிலேயே ரோஷம் வந்துவிட்டது. ரஞ்சிதத்தின்மேல் கைவைத்து வெளியே தள்ள எழுந்தார். ரஞ்சிதம் அவ்வளவு தூரத்திற்கு வைத்துக் கொள்ளவில்லை. அதே இடத்தில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து தணிகாசலத்தை நோக்கி வணங்கிவிட்டு, பிறகு எழுந்து திரும்பிப் பாராமல் தெருப்பக்கம் நடந்தாள்.

வரவேண்டியவர்களில் பலர் வந்துவிட்டார்கள். வராதவர்களுக்காகக் காத்திருக்கவேண்டிய அவசியமில்லை என்று தீர்மானித்துவிட்டார்கள். ஆகவேண்டிய ஏற்பாடுகள் மளமளவென்று நடந்துகொண்டிருந்தன. ரோஜாப் பூவையும் மல்லிகைப்பூவையும் போட்டு, பச்சை ஓலைப் பாடையைப் பூப்பல்லாக்காகவே மாற்றிவிட்டார்கள். தணிகாசலம் கழுவிக் குளிப்பாட்டப்பட்டான். புது மாப்பிள்ளைபோல் அலங்காரம் செய்யப்பட்டான். அவனைத் தூக்கிப் பாடையில் வைத்தபோது அந்தத் தெருவே அதிரும்படி அழுதாள் அண்ணி.

கடைசிப் பிரயாணம் காவேரிக் கரையை நோக்கித் தொடங்கியது. எல்லா வாத்தியங்களும் மீண்டும் முழங்கின. 'அரோகரா!' என்ற சத்தம் அடிக்கடி வானைப் பிளந்தது. கொள்ளிச் சட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு அண்ணு குனிந்த தலை நிமிராமல் முன்னல் நடந்தார்.

மேலவீதி வழியாகத்தான் இது காவேரிக் கரைக்குப் போகவேண்டும். தெருவை ஒட்டினாற்போல் திருப்பத்தில் ரஞ்சிதத்தின் மாடிவீடு. ஆண்களில் சிலர் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தனர். அண்ணுவும் மெதுவாகத் திரும்

பினர். கதவோரத்தில் அவளுடைய தாயாரும் தம்பியும் நின்றுகொண்டிருந்தார்கள். அவளைக் காணவில்லை. ஒரு வேளை பின்புறம் நின்றுளோ என்னவோ?

அண்ணு பயந்தபடி அங்கே ஒன்றும் அசம்பாவிதம் நடக்கவில்லை. திடீரென்று ரஞ்சிதம் குறுக்கே விழுந்து நடுத்தெருவில் மறித்துக்கொண்டால் என்ன செய்வது? அதைக் கீழே இறக்கித் தான் பார்க்கத்தான் வேண்டுமென்ருல் என்ன செய்வது? மற்றவர்களும் அதற்கு ஒப்புக்கொண்டால் என்ன செய்வது? இப்படி ஏதும் நடந்தால் அவருடைய வீட்டுக்காரிக்குப் பதில் சொல்வது யார்?

நல்லவேளை! இந்த இக்கட்டான நிலை ஏற்படாமலே அண்ணு தப்பிக்கொண்டார். ரஞ்சிதம் படித்த பெண். நாகரிகம் தெரிந்தவள். திரும்பவும் இப்படியெல்லாம் செய்வாளா? ஏதோ தெரியாத்தனமாக மனம் பொறுக்காமல் சற்றுமுன் அங்கே வந்துவிட்டாள். அப்படி வராமல் இருந்துவிட்டால் யாருக்குமே ஒன்றும் தெரியப்போவதில்லை. கௌரவத்தைக் காப்பாற்றிக்கொண்டிருக்கலாம். பாவம், பெண்புத்தி!

ஊர்வலம் ஊரைவிட்டு வெளியில் வந்துவிட்டது. தோட்டி முன்னேற்பாடாக எல்லாவற்றையும் முடித்து வைத்திருந்தான். தென்னந்தோப்பையும் நாணற் புதரையும் அடுத்த மணல்வெளியில் கட்டைகள் அடுக்கப்பட்டிருந்தன. பக்கத்தில் நன்ருகக் காய்ந்த விராட்டிக் குவியல்கள்.

சடங்குகள் எல்லாம் சம்பிரதாயத்திற்குப் பங்கமில்லாமல் நடந்தேறின. தணிகாசலம் பத்திரமாகப் படுக்க வைக்கப்பட்டான். கீழே உலர்ந்த விறகுகள். சுற்றிலும் விராட்டிகள். கவிழ்க்கப்பட்ட ஒரு செம்பு நெய். அண்ணு அழுகையும் விம்மலும் தாங்காமல் தன் அருமைத் தம்பிக்குக் கொள்ளி வைத்தார்.

குபீரென்று பற்றி எரிந்தது நெருப்பு. தீயின் நாக்குகள் இளைஞனைச் சுவைக்கத் துடித்தன.

கூலிப் படலம் உண்டல்லவா? பக்கத்துக் கொட்டகையில் உட்கார்ந்து சில்லரை மூட்டையை அவிழ்த்தார் அண்ணு. தோட்டி, துணி வெளுப்போன், பண்டிதன்—எல்லோருடைய கண்களும் பணத்திலேயே வட்டமிட்டன. யார்யாருக்கு எவ்வளவு என்று வழக்கத்தைச் சொல்லத் தொடங்கினர் ஓர் அனுபவசாலி.

திடீரென்று அப்போது சுடுகாடே அதிரும்படி ஓர் குரல் எழுந்தது:

"என் செல்ல ராஜா! என் கண்ணு ராஜா! நான் உங்களை விடமாட்டேன், ராஜா!"

—அது ரஞ்சிதத்தின் குரல்.

"என்....ரா....ஜா!"

திடுக்கிட்டு எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். சிதையில் அந்த ராஜாவின் முகத்தோடு தன் முகத்தையும் வைத்துத் தேம்பிக்கொண்டிருந்தாள் அந்த ராணி. பெற்றெடுத்த குழந்தையைக் கொஞ்சுவதுபோல் அவனைக் கொஞ்சுகிருள். பிறகு அவனை இறுக அணைத்தபடியே அருகில் படுத்துக்கொண்டாள்.

நெருப்பு அவர்களை நிதானமாக அணைத்தது.

யாருக்கும் ஒன்றுமே தோன்றவில்லை. வெலவெலத்துப் போய், தோட்டி தன் கழியை வீசி எறிந்துவிட்டு அவர்களைக் கண்ணீர் சோரக் கையெடுத்துக் கும்பிட்டான்.

மூன்ரும் நாள் எலும்புகளைத் தேடி எடுக்க முயன்ற போது, எது யாருடைய எலும்பென்றே தெரியவில்லை.

# அமர நிலை

வேட்டை நாய்களால் துரத்தப்படும் குழிமுயலின் இருதயம்போல் என் இதயம் அடித்துக்கொண்டது. நானும் அவ்வாறுதான் துரத்தப்பட்டேன், போலீஸ்காரர்களால். என்னைப் பிடித்துவிட்டால் எத்தனை வருஷம் உள்ளே தள்ளுவார்களோ? பத்தோ, ஆயுள் தண்டனையோ, அல்லது தூக்குக் கயிறோ? இத்தனையும், நான் செய்யாத குற்றத்துக்கு!

*1943*-ல் நடந்த கதை இது....

எவனோ, எங்கோ ஒரு அதிகாரியைத் தீர்த்துக்கட்டிவிட்டான். அதற்காக என்னைப்போய்த் தேடிக்கொண்டிருந்தார்கள். பொதுக்கூட்டத்தின் தொடக்கத்தில் நான் பாரதி பாட்டுப் பாடுவதோடு சரி. கொஞ்சம் இடங்கிடைத்தால் நாக்கில் நரம்பின்றி வெள்ளையனைத் திட்டுவேன். என்னுடைய தேசத் தொண்டு அவ்வளவுதான்.

என்னைப்போய் இந்தப் போலீஸ்காரர்கள் வீரனாகவும், தீரனாகவும், தியாகியாகவும் ஆக்கப் பார்த்தார்கள். வாய்ப்பேச்சைத் தவிர என்னிடம் வஞ்சகமில்லை.

இதை என்னிடம் உளவுகண்டுபிடித்துக் கூறியவள் என்னுடைய உயிரின் சொந்தக்காரி தேவகி. என்னைத் தேடிப் பிடிப்பதற்கு உத்தரவிட்டாரே, அந்த அதிகாரியின் செல்லக் குமாரி அவள். என்னைக் கைது செய்து வைத்திருந்தாள் அவள் உள்ளச் சிறையில்.

கண்ணீரும் கம்பலையுமாக அவள் என்னிடம் இந்த ரகசியத்தைக் கூறினாள். சென்னைக் கடற்கரையின் விளிம்பில் ஓர் தோணியின் மறைவில் நிலவு பூத்த முன்னிரவில் அவள் இதை என்னிடம் வெளியிட்டாள். அடுத்த ஒருமணி நேரத்துக்கெல்லாம் நான் சென்னையை விட்டே கம்பி நீட்டினேன்.

இப்போது தலைமறைவில் வாசம். காடு, மலை, கிராமம், நகரம், வெயில், மழை, இரவு, பகல் எல்லாம் எனக்கு ஒன்றுதான். என்னுடைய ஒரே நோக்கம், இப்போது என் உயிர் ஒன்றுதான்!

இந்த உயிர் அவளுக்குச் சொந்தம். இதைக் காப்பாற்றி அவளிடம் பத்திரமாகக் கொடுக்கவேண்டும்.

இல்லாவிட்டால், நான் சிறை சென்று தியாகியாகவோ, தூக்குமேடை சென்று வீரனுகவோ மாறியிருப்பேன். வெளியில் வந்தால் மலர்மாலை; வராவிட்டால் புகழ்மாலை. —உழைக்காமல் கிடைக்கும் பலன்!

இத்தனைப் பெருமைக்கும் விடாமல் என்னைக் கோழையாக்கிவிட்டாள். உயிருக்கு அஞ்சி ஓடச் செய்துவிட்டாள். ஒரு பெண்ணிடம் மனதைக் கொடுப்பது கோழைத்தனம், முட்டாள்தனம், அடிமைத்தனம் என்பதைத் தெரிந்தபிறகும் என்னுல் அதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அந்த ஆசையில் சுவர்க்கமல்லவோ இருக்கிறது!

என்னிடமுள்ள அவள் உயிருக்காக நான் நாளைக்கொரு ஊராய், வேளைக்கொரு இடமாய் என் உடலைச் சுமந்துகொண்டு—ஏன், ஒளித்துக்கொண்டு திரிந்தேன்.

இப்போது நான் இருப்பது ஓர் மலையின் அடிவயிற்றில். பெருவயிற்றுக்காரன் பட்டினி கிடக்கும்போது வயிற்றில் மடிப்பு விழுந்திருக்குமே, அதுபோன்ற ஓர் மடிப்பில் - ஓர் பிளவில் - நான் படுத்துக் கிடந்தேன். அங்கே போனபிறகுதான் ஓர் அற்புதமான புதுஉலகை நான் காணமுடிந்தது.

ஆம்: புத்தம் புதிய உலகம்!

அந்தப் பிளவுக்குள் வழவழப்பான பஞ்சணை ஒன்றை யாரோ கல்லில் செதுக்கி இருந்தார்கள். தலை சாய்த்துக் கொள்ளத் திண்டுகள்! பஞ்சாகவே தோன்றும் கருங்கற்கள். நான் மெய்ம்மறந்து அத்திண்டில் சாய்ந்தேன். மறுபாதி காலியாகக் கிடந்தது. நான் நீண்ட பெருமூச்சு விட்டேன். எனக்குத் தேவகியின் நினைவு வந்துவிட்டது.

நினைவு விரிந்து, விரிந்து, விரிந்து என் உள்ளக் கூட்டையே உடைத்துக்கொண்டு சிதறிவிடும்போலிருந்தது. வழவழப்பான அந்தக் கருங்கல் திண்டிலேயே ஓங்கி ஓங்கித் தலையை மோதி உடைத்துக்கொண்டால் என்ன? காதல் கனிந்து முதிரும் இந்தக் கடைசிக் கணத்தில் இத்தகைய பிரிவுத் துன்பமா?

மனமயக்கம் இல்லை இது; உண்மையிலும் உண்மை.

கல்லால் சமைந்த அந்த மிருதுவான மலர் மெத்தையில் எத்தனையோ சின்னஞ்சிறு சித்திரங்கள் உயிர் பெற்றுத் துடித்தன. ஒன்றில்கூட அழிவின் ஆரம்பத்தைக் காணேம். நான் வருவதற்கு அரைவிநாடிக்கு முன்புதான் யாரோ இருவர் அதிலிருந்து எழுந்துபோயிருக்க வேண்டும். காற்றில் கலந்துவரும் நறுமணம் அந்தப் படுக்கையினுடையதுதானு? அல்லது பக்கத்துச் செடிகளில் குலுங்கும் மலர்களுடையதா?

தேவகியின் கடைசிச் சந்திப்பு என்னை வாட்டியது.

கீழே புலி துரத்த ஒருவன் மரக்கிளைக்குத் தாவினுனும்; அங்கே கிளையில் நாகப்பாம்பு படமெடுத்துச் சீறிற்ரும். கீழே புலி; மேலே பாம்பு. அந்தரத்தில் தொங்கும் அவன், மரத்தின் உயரே தேன்கூட்டிலிருந்து சிதறும் ஒரு துளித் தேனுக்காக வளைந்து கொடுத்து நாக்கை நீட்டினுனும்! என் கதையும் அப்படித்தான்.

நாலுபுறமும் பயம்; வேட்டை நாய்கள். நடுவில் ஆசை; தவிப்பு.

மேலே பாறை கவிழ்ந்துகொண்டிருந்ததால் உள்ளே ஒளி புகவில்லை. ஒரே கும்மிருட்டு. பகலா இரவா என்பது கூடச் சந்தேகம். மலைச் சரிவை ஒட்டினுற்போல் கீழே ஆழ்கடல் ஆர்ப்பரித்தது.

மலைக்கும் மேலே வானம்; கீழே கடல்; மத்தியில் நான்.

சுற்றும்முற்றும் பார்த்தேன். திடுக்கிட்டேன். எனக்கு நேர்எதிரில், உடைந்த பாறைகளின் வழியே, இரண்டு

உருவங்கள் எதிரும்புதிருமாய் உட்கார்ந்து இருந்தன! ஒன்று ஆண்; மற்றொன்று பெண். கடலைப் பார்த்துக் கொண்டு மண்டியிட்டு உட்கார்ந்திருந்தாள் அவள். அவளை வைத்த விழி வாங்காமல் பார்த்துக்கொண்டு உட்கார்ந் திருந்தான் அவன்.

ஜனசந்தடியற்ற, மனிதரின் மூச்சுக் காற்றுப் படாத, தனிமையிலும் தனிமையான அந்த இடம் எனக்குத்தான் சொந்தமென்று நினைத்தேன். எனக்கு முன்பே அதைச் சொந்தமாக்கிக்கொண்டார்கள் அவர்கள். எனக்கு அங்கு இருப்புக்கொள்ளவில்லை. அதைவிட்டு அப்பால் வெளி யில் போகவும் பயம்.

நல்ல பயம் இது! மனிதனை இந்தப்பக்கமும் போக விடுவதில்லை; அந்தப்பக்கமும் போகவிடுவதில்லை. நான் கட்டுப்பட்டுக் கிடந்தேன். அந்தப் படுக்கையில் சாய்ந்து படுத்தேன். என் மூச்சு வெளிவருவதுகூட அவர்கள் காதில் சிறிதும் விழக்கூடாது.

பயம், பயம், பயம்; ஒரே பயம்! ஆசை, ஆசை, ஆசை; ஒரே ஆசை!

இதற்கிடையில் அவர்கள் ரகசியப் பேச்சு என் செவி களில் மெல்ல விழுந்தது. நான் உற்றுக் கேட்டேன்.

"இளவரசி!"

"சிற்பியாரே! என்னைப் பெயர் சொல்லி அழைக்க மாட்டீர்களா?"

"உத்தரவு இளவரசி!—இல்லை, மேகலா! உனக்கு நம்முடைய முதற் சந்திப்பு நினைவிருக்கிறதா?"

"நல்ல கேள்வி இது! எதைத்தான் நான் மறந்தேன்? மறப்பேன்?"

எனக்குத் தலை சுற்றியது. இது என்ன, கனவா? இளவரசியும் இந்தக் காலத்தில் இல்லை; சிற்பிகளும் மறைந்துவிட்டார்கள்.

ஆனாலும் குரல்கள் ஒலித்தன!

''சிற்பியாரே! என் தந்தை தாங்களைச் சிலை வடிக்க அழைத்ததையும், அப்போது நீங்கள் என்னைப் பார்த்த பார்வையையும் என்னவென்பது! சிலை வடிக்கும் எந்தக் கலைஞரும், தன் சிலைக்குரிய பொருளை அப்படித்தான் பார்ப்பது வழக்கமா?''

''எப்படிப் பார்த்தேனென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அது என்னுடைய முதல்சந்திப்பு இல்லவே இல்லை. காலங்காலமாய்ப் பிரிந்த என் இன்னுயிரை - காலங்காலமாய்த் தேடிக் களைத்த என் கற்பனையை - நான் மீண்டும் கண்டுகொண்டேன். கண் இமைத்தால் உன்னுடைய எழில் உருவம் எங்கே மறைந்துவிடுமோ என்ற பயம்!''

''நீங்கள் அந்த முதற் பார்வையிலேயே என் உயிரைக் குடித்துவிட்டீர்கள்.''

''அது உன் உயிரல்ல; என்னுடையது.''

எனக்குப் புல்லரித்தது. என்னுடைய தேவகியும் இதையேதான் கூறினாள். என் உயிர் அவளுடையதாம்! இங்கு இதை அவன் சொல்கிறான்:

''மேகலா! உன்னை எதிரில் உட்கார வைத்து உன் ஒயிலுருவைக் கல்லில் வடித்தபோது, நீ எதையோ திரைச்சேலையில் வரைந்துகொண்டிருந்தாய். அதை நீ என்னிடமிருந்து வேண்டுமென்றே மறைத்தாய். ஆனால் மறைத்ததெல்லாம் என்ன ஆயிற்று? மறைக்கமுடியாத ஒன்றை மறைக்கவே முடியாது மேகலா!''

''சித்திரத்தை நான் முடித்து உங்களிடம் கொடுத்த போது, உங்கள் உருவத்தையே நீங்கள் அதில் கண்ட போது, ஏன் அப்படிப் பதறிப்போனீர்கள்?''

''உன்னைத் தெரிந்துகொண்டேன், மேகலா! கல்லால் சிலை வடிப்பவன் சிலசமயம் கல்லுக்குள்ளே தன் நெஞ்சை வைத்துவிடுவதும் உண்டு. தூரிகையால் ஓவியம் வரைபவன் சிலசமயம் அந்த ஓவியத்துக்கே தன் உயிரை வழங்கிவிடுவதும் உண்டு. நீ வரைந்த என் உருவத்தில் நீயே ஒளிந்துகொண்டிருந்தாய், மேகலா! நான் உன்னைக்

கண்டுகொண்டேன். நான் கலைஞன்; என்னை நீ ஏமாற்றி இருக்கமுடியாது."

"உங்களுடைய அந்தக் கண்ணீர்?"

"உன் கண்ணீரிலிருந்து பிறந்தது. நீ எழுதிமுடித்த சித்திரத்தை என்னிடம் கொடுக்கும்போது உன் மென் கரங்கள் ஏன் அப்படி நடுங்கின? 'தங்கள் கண்ணீரைத் துடைக்கும் பாக்கியம் இந்த ஏழைச் சிற்பிக்குக் கிடைக்குமா, இளவரசி?' என்று நான் தடுமாறியபோது, 'நெஞ்சில் நெருப்பிருந்தால் செய்யுங்கள்!' என்று ஏன் நீ பதிலளித்தாய்? பிறகு ஏன் என்னுடைய கரங்களைப் பற்றிக்கொண்டு கண்ணீரால் கழுவினாய்?"

"கண்ணீரைத் துடைத்த மறுகணமே அதைக் கழுவிக்கொள்ள என்றுதானே நினைத்தீர்? சிற்பியாரே! நீர் என்னைத் தெரிந்துகொள்ளவே இல்லை."

"தெரிந்துகொள்ளவும் இல்லை; தெரிந்துகொள்ள விரும்பவும் இல்லை. உன் தந்தையை எனக்குத் தெரியும். உன்னை மணக்க இருந்த அந்த இளவரசனையும் தெரியும். நீ திருமணத்துக்குப் பிறகு உன் கணவனோடு சென்றால், உன்னைப் பார்க்கமுடியாதென்றுதானே தமது அரண் மனைக்கு உன் தந்தை சிலையை வடிக்கச் செய்தார்? இத்தனை பாசமுள்ள தந்தைக்கு முன், ஆசையுள்ள இள வரசனுக்கு முன், நான் எதை எப்படித் தெரிந்துகொள் வது, மேகலா!"

"பெண் மனம் மட்டும் தெரியவில்லை; அதிலும் பின்னால் தெரியவில்லை!"

"மேகலா! ஒரே சமயத்தில் நான் இரண்டு சிலைகள் வடித்தேன். ஒன்றை அரண்மனையிலும், மற்றொன்றை இந்த மலைக் குகையிலும் வடித்தேன். ஒன்று உன் தந்தைக்கு; மற்றொன்று உனக்கு!"

கலைஞரே! உங்களுக்குக் கல் இருந்தால் போதும்; நெஞ்சு வேண்டாம். உருவம் இருந்தால் போதும்; உள்ளம் வேண்டாம். அப்படித்தானே?"

"உன் தந்தையின் பாசத்துக்கு எதிராக, அந்த இளவரசனின் ஆசைக்கெதிராக, உன் அரச குல வழக்கத்துக்கெதிராக நீ இப்படி முடிவு செய்வாயென்றே நான் நம்பவில்லை, மேகலா! இப்படி என்றால் உன் வாழ்வு சிதையுமெனத் தெரிந்திருந்தால், அன்றே என் கரம் நீட்டி உன் கண்ணீரைத் துடைத்திருக்க மாட்டேன். ஒரு கணத்தின் பலவீனம் ஒரு வாழ்வையே பற்றிக்கொண்டுவிட்டதே!"

"கோழைத்தனம் போதும், நிறுத்துங்கள்! பெண் தன் வாழ்வில் எதை விரும்புகிறாள், எதை வெறுக்கிறாள் என்று ஆண்களுக்கென்ன கவலை?"

"மேகலா! நீ எழுதிய சித்திரத்தை வைத்துக்கொண்டே, இந்த மலைக்குகைக்குள் உன் சிலைக்கு எதிராக என் சிலையையும் செதுக்கினேன். இந்தச் சிலைஉருவிலேயே நாம் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந்தால் போதாதா? மேகலா! நாம் இனி ஒன்றாய் வாழவே முடியாது. இப்போது நம்மை வேட்டையாடத் தொடங்கியிருப்பார்கள். அகப்பட்டால் சிறைச்சாலையோ, சித்திரவதையோ, இன்னும் என்ன துன்பமோ? நான் சொல்வதைக் கேள்."

"சிற்பியாரே! ஏன் இந்த வீண் பேச்சு? ஒரு கணமாவது நாம் ஒன்றாய் வாழ்ந்தால் போதும். மலைக் குகையில் நமது சிலைகளின் முன்னாலேயே நாம் மணம்செய்து கொண்டு அங்கேயே மறைந்து வாழ்வோம். குதிரைக் குளம்புகளின் ஓசை தூரத்திலே கேட்டாலோ, காவல் கூட்டத்தினரின் வேல் கம்புகள் கண்களில் பட்டாலோ பிறகு நமது முடிவை நிச்சயம் செய்வோம். மலையின் உச்சியும், கடலின் ஆழமும் நமக்கு வெகு அருகில்தானே இருக்கின்றன? நம்மைத் தேடி வருகிற வீரர்கள் நமது சிலைகளைப் பார்த்துத் திரும்பட்டும்."

அப்புறம் ஒரே அமைதி, இருள், மௌனம்.

திடீரென்று கடல்அலைகளின் சீற்றம். புயல் உறுமிச் சுழன்றது. மலை உச்சியிலிருந்து பெரிய பாறை ஒன்று

பயங்காரமான சத்தத்துடன் உருண்டு விழுவதைக் கேட்டேன்.

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது.

பிறகு பயம் அடங்கிய வேளையில் அந்த மலைப்பிளவினூடே தலைதூக்கிப் பார்த்தேன். அந்த இருவரும் அப்படியே எதிரும் புதிருமாய் - நானும் தேவகியும் கடற்கரையில் உட்கார்ந்திருந்ததுபோல் - உட்கார்ந்துகொண்டு தானிருந்தார்கள்; பேசவில்லை. —இரண்டும், இரண்டு சிலைகளா?

எழுந்து அருகில் சென்றேன். அந்த இரு உருவங்களையும் மாறிமாறிப் பார்த்தேன். ஒருமுறை அவர்கள் இளவரசியும் கலைஞனுமாகவும், மறுமுறை நானும் தேவகியுமாகவும் காட்சி அளித்தார்கள். அந்த இளவரசி கலைஞனைப் பார்த்துக்கொண்டிருந்த அந்தப் பார்வையில் தேவகி கடைசியாக என்னைப் பார்த்தாளே அதே ஏக்கம், அதே சோகம், அதே தாபம் தெரிந்தன. உலகம் தோன்றிய நாள் முதல் உலகம் அழியும் நாள் வரை காதலின் போக்கெல்லாம் ஒரே விதந்தானு? 'காதலர்களின் எண்ணங்களும், பேச்சுக்களும், செயல்களும் ஒரே மாதிரியானவைதானு? காதலின் வெற்றி அவர்களது பிரிவிலோ, அல்லது மரணத்திலோதான் மறைந்து கிடக்கிறதா?

என்னுடைய இதயம் மலையைச் சுமப்பதுபோல் கனத்தது.

அழிவை அழித்துவிட்ட அந்தச் சிலைகள் என்னுடைய-எங்களுடைய - அழிவற்ற நேரத்தை நினைவூட்டின. இந்தக் கடைசிச் சந்திப்பு நிரந்தரமான ஒன்றுதான். ஊற்றுப் பெருக்காய் அவள் எனக்காகக் கண்ணீர் வடித்ததும், நீண்ட நெருப்பாய் அவள் எனக்காக நெட்டுயிர்த்ததும், என் முன்னிலையில் அவள் துடித்த துடிப்பும், தவித்த தவிப்பும் பொய்யானவைா?

வாழ்வில் அந்தக் கணம் ஒன்றுதான் நிரந்தரம். அது ஒன்று மட்டும் போதும்.

வானத்தின் உச்சி விளிம்பை உணர்ச்சிப் பெருக்கால் தொட்டாயிற்று. உடனே அதற்கும் மேலே பறந்து எரிந்துவிட வேண்டும். அல்லது ஆழப் படுகுழியில் வீழ்ந்து அழிந்துவிட வேண்டும். வேறு எப்படி அந்தத் தூய அன்பை அமரநிலைக்கேற்றுவது?

பிரிவுதான் அழியாதது, துன்பந்தான் இன்பமூட்டுவது; சோகந்தான் நிலைத்து நிற்பது. மரணத்தைவிட நிச்சயமானது வேறென்ன உள்ளது? மரணத்திலேதான் எந்த உணர்ச்சியும் அமரநிலை பெறமுடியும். காதலும் அப்படித்தான்!

ரோமியோ - ஜூலியத், லைலா - மஜ்னு, அமராவதி - அம்பிகாபதி, இளவரசி - இளஞ்சிற்பி, தேவகி - நான்....

வேட்டையாடப்படும் என் உயிரைப் பற்றி நினைத்தேன். தகப்பனர் சட்டத்தின் பெயரால் அதை வேட்டையாடுகிறார்; மகள் காதலின் பெயரால் அதையே செய்கிறாள். இந்த உயிர் எனக்கா, அவருக்கா, அவளுக்கா?—யாருக்குச் சொந்தம்?

சரி!

நாளைக்கோ, அடுத்த வருஷமோ, பத்து வருஷம் கழித்தோ, அவளிடம் என் உயிரைப் பத்திரமாகக் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கிறேன். அதற்குள் அவள் நிலை மாறிவிட்டால்? இன்னொருவனை மணந்துகொள்ளலாம்; காதலிக்கலாம்; அல்லது அவளே இறந்துவிடலாம். அதே நிலைகளில் ஏதாயினும் ஒன்று எனக்கும் ஏற்படலாம்.

இந்த வீண் துன்பமெல்லாம் எதற்கு? கடற்கரைக் கடைசிச் சந்திப்பே நிரந்தரமானது. நானும் அவளும் அப்போது உண்மையின் ஒளிச்சுடர்களாக இருந்தோம். அந்த ஒருநாழிகைப்பொழுதில் எங்களிடம் நடிப்பில்லை, வஞ்சகமில்லை, பொய்யில்லை. நாங்கள் அப்போது அழியாத சத்தியத்தின் அணுத் துளிகள். நாங்கள் அப்போது அமரர்கள்!

அமரநிலையை நிலைநாட்டுவதற்காக நான் இறக்கத் துணிந்துவிட்டேன்.

எந்த உயிரை அவளுக்காகக் காப்பாற்றத் துடித்தேனோ, அதே உயிரை அவளுக்காக அழிக்க முடிவுசெய்து விட்டேன். காதல் வாழவேண்டுமானால் காதலர்கள் வாழக்கூடாது!

தேவகியின் விலாசத்துக்கு ஒரு கடிதம் எழுதினேன் என் முடிவைச் சொல்லி, எனக்காகக் கடற்கரையின் அந்த இடத்துக்கு மீண்டும் ஒருமுறை போய், ஒரே ஒரு சொட்டுக் கண்ணீர் மட்டும் விடச் சொல்லியிருந்தேன்.

தேவகிக்காக அந்தச் சிலையிடம் விடைபெற்றுக் கொண்டு கடலில் இறங்கினேன். கடிதமும், என் மேல் சட்டையும் கடற்கரை மணலில் ஒரு பாறையின் இடுக்கில் தெரியும்படி இருந்தன. கடலுக்குள் நான் போய்க் கொண்டே இருந்தேன். இடுப்பளவு தண்ணீரில் எதிர்ப் பட்ட பேரலைகள் என்னைப் பின்னால் தள்ளின. கோபமாய்த் தள்ளின.

ஊதுகுழல் சத்தம் விட்டு விட்டு ஒலித்தது. என்ன இது! காதைச் செவிடாக்கும் போலீஸ் 'விசி'லா?

தடதடவென்று சத்தம். பிடி பிடி என்ற குரல்கள். பின்புறம் ஒரே கூச்சல்; குழப்பம்.

இரண்டு போலீஸ்காரர்கள் தாவி வந்து என் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டார்கள்?

அப்புறம்?

இப்போது நான் வாழ்கிறேன். நாங்கள் வாழ்கிறோம். எங்கள் காதலுக்கு இன்னும் அமரநிலை கிட்டவில்லை.

# காட்டுமிராண்டிகள்

மிகப் பெரிய விஞ்ஞான மேதையான அந்தக் கிழவர் இப்படிச் செய்வாரென்று யாரும் எதிர்பார்க்கவில்லை. உலகமே திடுக்கிட்டது. வட துருவத்திலிருந்து தென் துருவம் வரை, கீழ்க்கோடியிலிருந்து மேலக்கோடி வரை —எங்கெல்லாம் நாகரிகம் பரவி உள்ளதோ அங்கெல்லாம் இந்தச் செய்தி அதிர்ச்சி தந்தது.

விஞ்ஞானத்தில் அற்ப அறிவு உள்ளவர்களுக்குக்கூட அவரைப் பளிச்சென்று தெரியும். அத்தனை பெரிய மனிதர்.

பத்திரிகைகள் முதற் பக்கத்தில் அந்தச் செய்தியை வெளியிட்டன:

**மேதையின் மறைவு!**

**விஞ்ஞானியின் விபரீத முடிவு!**

**அறிஞரின் தற்கொலை!**

ஆம்; திடீரென்று ஒருநாள் காலை அவருடைய அறையில் கிழவரைக் காணவில்லை. ஒரு துண்டுக் காகிதத்தில் "நான் இன்றிரவு கடலில் விழுந்து இறக்க முடிவுசெய்து விட்டேன். போய்வருகிறேன்" என்ற குறிப்பு மட்டும் மேஜைமேல் காணப்பட்டது.

அவருக்குச் சமையற்காரியாகவும் பணிப் பெண்ணாகவும் இருந்தவளிடம் விசாரித்தனர். அடிக்கடி அவர் தற்கொலை பற்றிப் பேசிக்கொண்டிருந்தார் என்பதைத் தவிர, வேறொன்றும் துப்புக் கிடைக்கவில்லை.

அவர் வசித்த கிராமத்தை அடுத்த ஆழ்கடலை வலை போட்டு அரித்துப் பார்த்தார்கள். முக்கிய நாடுகளுக்குத் துப்பறியும் நிபுணர்களை அனுப்பிச் சல்லடை போட்டார்கள். ஒன்றிலும் புலன் கிடைக்கவில்லை. உலகம் அப்

போது அடுத்த பெரும்போருக்குத் தயாராகிக்கொண்டிருந்ததால், விஞ்ஞானியைப் பற்றிய சலசலப்பு விரைவிலேயே அடங்கிவிட்டது. அதிகமாக அது அந்த ஒரு மனிதரின் நஷ்டத்தைப்பற்றிக் கவலைப்படவில்லை.

ஆனால் கிழவர் அப்போது உயிருடன்தான் இருந்தார்!

அவர் பத்திரமாய்த் தம்முடைய இயந்திரப் படகில் ஆயிரம் மைலுக்கப்பாலுள்ள ஓர் சிறு தீவுக்குப் போய்ச் சேர்ந்தார். காட்டுமிராண்டிகள் வசித்த தீவு அது. இருநூறு பேர்கள்கூட அங்கே இருந்தார்களா என்பது சந்தேகம். ஏற்கனவே அந்தத் தீவுக்கும் அவருக்கும் சிறு தொடர்புண்டு. அதன் தலைவன் அவருக்குப் பழக்கமானவன்.

அவர் சென்ற விமானம் நொறுங்கி விழுந்த சமயம் அவர் அந்த மனிதர்களால் காப்பாற்றப்பட்டார். அதுவே முதல் பழக்கம்.

பிறகு ஓய்வுக்கு அவராகவே அங்கு போய் ஒரு மாதம் தங்கித் திரும்பினார். அவர்களுடைய மொழிகூட விஞ்ஞானிக்குக் கொஞ்சம் தெரியும்.

காட்டுமிராண்டிகள் என்று நகரத்தவர்களால் அழைக்கப்பெற்ற அந்தத் தீவினரிடத்தில் இவருக்கு அளவற்ற அன்பு. ஆனால் அவர்கள் மொழியில் காட்டுமிராண்டிகள் என்றால் வெறிபிடித்த மிருகங்கள் என்று பொருள்.

கிழவர் தங்களிடம் நாகரிகத்தைப் பரப்பவோ, மத போதனை செய்யவோ, பகுத்தறிவைப் புகட்டவோ வரவில்லை என்று தெரிந்தபிறகு அவரைத் தங்களில் ஒருவராக ஏற்றுக்கொண்டார்கள். பிரியத்தோடு பழகினார்கள்.

கிழவருக்கு அந்தத் தீவு சொர்க்கமாகத் தோன்றியது.

இயற்கைத் தேவி அங்கு இன்ப நடனம் புரிந்தாள். அருவியாக அவள் ஓடிக் குதித்தாள்; மலர்களாக அவள்

விழித்துச் சிரித்தாள்; கனிகளாக அவள் குலுங்கி விம்மினாள். அவள் இதழூறும் தேன்துளிகள் ஆயிரம் ஆயிரம் மலர்ச்சிறைகளில் நறுமணத்தால் சூழப்பெற்றுச் சுவைப் பாரற்றுக் காத்திருந்தன. நீண்டு வளர்ந்த கடற்கரைத் தென்னை மரங்களின் உயரத்தில் அவள் லட்சியக் கனவாக வளர்ந்தாள். மலைகளின் சிகரத்தில் அவள் அமைதியின் சிகரமாய் மோனத் தவமிருந்தாள்.

நிலாக் காலத்தில் ஆணும் பெண்ணுமாய் அவர்கள் கூடிப் புரிந்த ஆனந்த நடனம் கண்டு, 'எத்தனை இன்பம் இந்த உலகில்!' என்று பூரித்தார் விஞ்ஞானி.

அவர் ஏதோ ஓர் நோக்கத்துடன்தான் அங்கு வந்திருக்கவேண்டும்.

தம்முடன் இயந்திரப் படகில் எடுத்து வந்த சில கருவிகளை அந்த மனிதர்களின் உதவியால் அவர் ஓர் மலை உச்சிக்குக் கொண்டுசேர்த்தார். பக்கத்து அருவியின் வேகத்தில் இயங்குகிற மாதிரி ஓர் பொறியைப் பொருத்தினார். நீண்ட கம்பிகளால் அந்தப் பக்கமெல்லாம் ஒன்றாக இணைத்தார். இத்தனைக்கும் அவர்களுடைய பேருதவி கிடைத்தது.

தீவின் தலைவன் ஆச்சரியத்துடன் அவரைக் கேட்டான்: "இதெல்லாம் என்ன?"

"வெளிஉலகத்தில் நடப்பதைப் பார்க்கக் கருவிகள் அமைக்கிறேன். விரைவில் நீங்கள் எல்லோருமே வெளிநாட்டுக் காட்சிகளை இதன்மூலம் பார்க்கலாம்."

தலைவனுக்குப் பேரானந்தம். மற்றவர்களும் அந்த நல்லநாளை ஆவலாக எதிர்பார்த்தார்கள்.

ஒரேஒரு இளைஞனுக்குமட்டும் இது பிடிக்கவில்லை. அவன் சந்தேகத்துடன் முணுமுணுத்தான்.

"நான் உங்கள் பேச்சை எப்படி நம்புவது? எங்கள் தீவை முற்றுகை போடத்தான் நீங்கள் கம்பியால் இணைக்கிறீர்கள்."

அந்த இளைஞன் ஒருமுறை அங்கு வழிதவறிக் கரை தட்டிய கப்பல்மூலம் வெளிநாடு சென்று திரும்பியவன். ஏற்றிக்கொண்டுபோன கப்பல் தலைவன் அவனுடைய தொல்லை பொறுக்கமுடியாமல் சீக்கிரமே அவனை அனுப்பி விட்டான். தலைவனுக்கு அடுத்தாற்போல் அந்தத் தீவில் அவனே அறிஞன்.

கிழவர் தம் தாடியைத் தடவிக்கொண்டு அவனைக் கூர்ந்து நோக்கினர்: "உன் சந்தேகமும் நியாயமானது தான். எப்போது இதனுல் உங்களுக்குக் கெடுதல் என்று தெரிகிறதோ, அப்போது நீ என்னைக் கொன்றுவிடலாம்."

இளைஞன் ஒப்புக்கொண்டான்.

கிழவர் அல்லும்பகலும் அதன் அருகிலேயே உட்கார்ந்துவிட்டார். தொலைநோக்கிக் கருவியால் எல்லை தாண்டி உற்றுப் பார்த்தார். காதுகளில் தொலைபேசியை மாட்டிக்கொண்டு எந்தக் குரலையோ உற்றுக் கேட்டார். தலைவன் அவரிடம் விசாரித்தபோது, "இன்னும் சிலநாள் பொறுத்தால், காட்சிகளைப் பார்க்கமுடியும்" என்ருர்.

சிலசமயம் அவருக்கு ஆழ்ந்த சிந்தனை; சிலசமயம் எண்ணற்ற உணர்ச்சி-அலைகள்; சிலசமயம் எல்லையற்ற பயப்பிராந்தி. ஜுர வேகத்தில் அவர் இயந்திரத்தை முடுக்கிக்கொண்டிருந்தார்.

ஒருநாள் திடீரென்று தலைவனிடம் சொல்லி எல்லோரையும் கூவிஅழைத்தார். அவர் தேகம் பயத்தால் வெலவெலத்தது; நாக்கு குளறியது.

"ஓடிவாருங்கள்! வந்து இந்த மலைச் சரிவில் ஒளிந்து கொள்ளுங்கள்! இடி, மழை, புயல், பூகம்பம் எல்லாம் ஒன்ருய் வரப்போகிறது! வாருங்கள்; ஓடிவாருங்கள்!"

அந்த இளைஞன் அவரையும் அவர் இயந்திரத்தையும் சந்தேகத்துடன் பார்த்தான்.

"போ! நீ முதலில் ஒளிந்துகொள். இல்லாவிட்டால் வீணில் அழிந்துபோவாய்!"

எல்லோரும் தலைவனின் ஆணைக்குக் கட்டுப்பட்டு மலைச் சரிவில் பதுங்கினார்கள்.

ஆ! அடுத்த நிமிடத்தில்....!

காதுகளைப் பிளக்கும் ஆயிரம் இடிச் சத்தம். கண்களைப் பறிக்கும் ஆயிரம் மின்னல்கள். நெருப்பின் ஜ்வாலை ஒவ்வொருவர் முன்னாலும் மஞ்சளாக, சிவப்பாக, ஊதாவாக, நீலமாக ஏழு நிறங்களில் குபீரெனப் பற்றியது.

தொடர்ந்தாற்போல் மண்மழை, பூமியின் அதிர்ச்சி, புயலின் சீற்றம், கடலின் குமுறல், மரங்களின் ஓலம், மிருகங்களின் உறுமல், பறவைகளின் படபடப்பு!

ஊழிக்காலம்! ஊழிப் பேய்களின் பயங்கரக் கொக்கரிப்பு! "ஹ!....ஹு....ஹோ!"

"ஹோவ்!....ஹூய்!....ஹாய்!"

உச்சித் தலையில் முடி குத்திட்டு நிற்க, தாடி பல பக்கமும் பறக்க, இயந்திரத்தை வெறியுடன் இயக்கிக்கொண்டிருந்தார் கிழவர்.

எல்லாம் முடிந்தது. ஊழிக்குப் பின் ஏற்படுமே அந்தப் பொல்லாத பேரமைதி.

கிழவர் குரல்கொடுத்தார்: "அபாயம் நீங்கிவிட்டது; எல்லோரும் வாருங்கள்!"

முதல்முதலாக அந்த இளைஞன் கண்களில் நெருப்புப் பொறி பறக்க வேங்கையெனத் தாவி வந்தான்.

"கிழட்டுப் பயலே! எல்லாம் உன் இயந்திரத்தால் வந்த வினை!"

பளிச்சென்று அவன் கையிலிருந்த கத்தி கிழவரின் மார்பில் ஓங்கிப் பாய்ந்தது. இருதயத்திலிருந்து அவருக்கு ரத்தம் பீறிட்டது. அதற்குள் கூட்டமும் அவரைச் சூழ்ந்துகொண்டது.

கிழவரின் முகத்தில் ஒருபுறம் வேதனை; மறுபுறம் புன்னகை.

"இப்போது இந்தத் தீவிலுள்ள மனிதர்களையும் உயிரினங்களையும் தவிர உலகத்தில் எல்லாமே அழிந்து விட்டன. வல்லரசுக் கோஷ்டிகள் இரண்டாகப் பிரிந்து ஒன்றை ஒன்று நம்பாமல், ஒரே சமயத்தில் அணுவால் தாக்கிக்கொண்டு உலகுக்கே அழிவு தேடிவிட்டன. உயிரினத்தின் ஒரு துளியையாவது காப்பாற்ற முடியுமா என்கிற ஆசையால் இங்கு வந்தேன். என் வேலை முடிந்து விட்டது. இனி இந்தக் கருவிகளையும் கடலில் தூக்கி எறிந்துவிட்டு ஒற்றுமையாக வாழுங்கள்."

"உலகத்திற்கு அழிவா?"

"ஆமாம்; கடவுள் படைத்தார்; காட்டுமிராண்டிகள் அழித்துவிட்டார்கள்." அப்போது மூடிய கிழவரின் கண்கள் பிறகு திறக்கவே இல்லை.

# காசும் பாசமும்

கந்தன், காவேரி ஆற்றங்கரையில் கைகளைப் பின் புறம் கட்டிக்கொண்டு நின்றான். ஆற்றின் புது வெள்ளத்தையும், மேற்கு வானத்தில் திரண்டுவரும் கார்மேகக் கூட்டத்தையும் அவன் கண்கள் மாறிமாறிப் பார்த்தன.

மூக்கப்பட்டிச் சொக்கன் மகனான கந்தன் திருச்சிராப் பள்ளி பள்ளிக்கூடம் ஒன்றில் நான்காவது பாரம் என்கிற ஒன்பதாம் வகுப்பில் படித்துவந்தான். படிப்பு இலவசம்; சாப்பாடும் இலவசம். படிப்பு பள்ளியில்; சாப்பாடு சத்திரத்தில். சத்திரத்தின் இருண்டுபோன மேற்கூரையில் ஒட்டிக்கொண்டு தலைகீழாய்த் தொங்கும் வௌவால் குஞ்சுகளில் ஒன்றுபோல், அவனும் பல இலவசங்களில் ஒன்றாய்த் தரையின்மேல் ஒட்டிக்கொண்டு தலைமேலாக வாழ்ந்தான்.

காலை ஒன்பது மணிக்கு இலைபோட்ட சாப்பாடு; மத்தியான்னம் தூக்குச் சட்டியில் மோர்ச் சாதமும் ஊறுகாயும்; ராத்திரிக்கு ஏழு மணிக்கெல்லாம் திரும்பவும் சாப்பாடு. நோட்டு, புத்தகம், பேனா, பென்சில், துணிமணி, சோப்பு, சீப்பு இதெல்லாம் சொந்தச் செலவு. கந்தன் நன்றாய்ச் சாப்பிட்டான்; நன்றாக விளையாடினான்; நன்றாகப் படித்தான். வரண்டு கிடந்த வயலில் புதுநீர் பாய்ந்தவுடன் பயிர் கொழுத்து வளர்கிற மாதிரி, படிப்பு வாசனை அறியாத வழியில் வந்த அவன் மூளையில் கல்வி கொழுந்து விட்டது.

மூக்கப்பட்டியின் முக்கியப் புள்ளியான அக்கப்போர் அண்ணாமலை இல்லாவிட்டால் அவன் மழைக்குக்கூடப் பள்ளியில் ஒதுங்கியிருக்க மாட்டான். தன் அப்பன் சொக்கனுடைய கொல்லுப்பட்டறையில் துருத்தி ஊதிக் கொண்டோ, சம்மட்டி அடித்துக்கொண்டோ, இரும்பு ராவிக்கொண்டோ இருப்பான். படிப்பு அவன் மூளையில் ஏறிய பின்பும் தேகம் கட்டு விடவில்லை. விடுமுறையில் கிராமத்திற்குப் போனால் சம்மட்டி தூக்குவதுண்டு.

சொக்கன் எதற்காகத் தன் பிள்ளையைப் படிக்க வைக்க வேண்டும்? எதற்காகப் பத்துப்பேரிடம் பல்லைக் காட்டி, இருபதுபேர் காலைப் பிடித்துக் கெஞ்சவேண்டும்? எல்லாம் இந்த அண்ணுமலையால் வந்ததுதான்.

அக்கப்போர் அண்ணுமலை மொட்டை மனுவில் கெட்டிக்காரன். ஊருக்குள் சிண்டு முடிந்துவிட்டே தன்னைப் பெரிய மனிதனுக்கிக் கொண்டான். தோட்டி முதல் தொண்டமான் வரை அவனுக்குள் அடக்கம். கணக்கனும் மணியமும் அவனுக்குக் கைத்தாளம் போடுவார்கள். அப்பேர்ப்பட்ட அண்ணுமலை ஒரு சமயத்தில், சொக்கனுக்கு ரூபாய் ஐம்பதைக் கடன் கொடுத்து, நூற்றைம்பதுக்கு எழுதி வாங்கிக்கொண்டான். நிலத்தையே ஏப்பம் விட்டு விட்டான்!

அக்கப்போர் படித்திருந்தான். அதிலும் 'இங்கிலீசு' படித்திருந்தான். தன் மகனும் படிக்கவேண்டும்; அதிலும் இங்கிலீசு படிக்கவேண்டும். படித்து அந்த அரைக்காணி நிலத்தைத் திரும்ப விலைக்கு வாங்கவேண்டும்; அல்லது வம்பு வழக்குக்குப் போய் அக்கப்போருடனேயே அக்கப்போர் செய்யவேண்டும் என்றெல்லாம் விரும்பிய சொக்கன் ஒருநாள், "கந்தா! கொல்லுப்பட்டறையில் வருகிற காசு கால்வயித்துக்குத்தாண்டா கட்டிவரும். உன் பாட்டனுக்கு முப்பாட்டன் தேடின சொத்து இப்படி என்னலே பாழாப் போச்சுடா! நீ 'இங்கிலீசு' படிடா, நல்லாப் படிடா!" என்ருன்.

சொக்கன் திருச்சிக்கு வருகிறபோதெல்லாம் கந்தனின் இங்கிலீஷைப் பற்றிப் பக்கத்துப் பையன்களிடம் கேட்கத் தவறுவதில்லை. கொல்லுப்பட்டறைக்கு வருகிற பேருக்கும் கந்தனின் படிப்பைப்பற்றித் தெரியும். அவன் வைத்துப் படிக்கிற இங்கிலீஷ் புத்தகங்களை அடுக்கினுல் அந்தப் பட்டறையே போதாது. —அத்தனை பெருமை!

பெருமைக்குரிய கந்தன் பின்புறம் கட்டிய கைகளை அகற்ருமலேயே ஆற்றங்கரையில் நின்ருன். பதினைந்து பதினறு வயதிருக்கும். வயதுக்கு அதிகமான வளர்ச்சி;

உடற்கட்டு. இடுப்பில் சராயும் மேலே அரைக்கை சொக்காயும் போட்டுக்கொண்டிருந்தான். பாலத்தின் இடுக்குகளில் பாய்ந்த புதுவெள்ளம் சீறிக்கொண்டு வந்தது. கந்தனுக்கும் அதுபோலச் சீற்றம்தான்.

அப்பனை எதிர்பார்த்து எதிர்பார்த்து அவன் கண்கள் பூத்துவிட்டன. நின்று நின்று கால்கள் கடுத்தன. அப்பன் வருவதானால் அந்த ஆற்றங்கரைப் பாலத்தில்தான் வர வேண்டும். நேற்றே வரவேண்டிய அப்பனை அதற்கு முதல்நாளிலிருந்தே கந்தன் எதிர்பார்க்கிறான்.

"இன்னும் வரவில்லையா, கந்தா?" — அவனுடைய தோழன் சுப்பையா, தோள்மேல் கையை வைத்துக் கேட்டான். சத்திரத்திலிருந்து அப்போதுதான் அவன் வந்திருக்கவேண்டும். இத்தனை நேரம் அடக்கப்பட்ட கந்தனின் கண்ணீர் குபீரென்று பாய்ந்தது. அவன் பதில் அளிக்கவில்லை.

"வேறு எங்கும் ஒரு நாலணா கிடைக்கவில்லையா? நாளைக்குக் காலையில் கொடுத்தாக வேண்டும்."

கந்தன் தன் நண்பனை உற்றுப் பார்த்தான். அவனுக்குச் சுப்பையாவைப் பார்க்க அவமானமாகவும் பொறாமையாகவும் இருந்தது. தன்னிடம் இல்லையென்பதைக் குத்திக் காட்டுகிறானா? அல்லது இரக்கப்படுகிறானா? —இரண்டுமே கந்தனுக்குப் பிடிக்கவில்லை.

"நீ போய் உன் வேலையைப் பார்! காசு கிடைத்தால் கலந்துகொள்கிறேன்; இல்லாவிட்டால் சும்மா இருக்கிறேன். ஏன், நீ கொடுத்த நாலணா உனக்குத் திருப்பி வேணுமா? இந்தா, எடுத்துக்கொள்."

சட்டைப்பையில் கையை விட்டு அந்த நாலணாத் துட்டை எடுத்து அவனிடம் நீட்டினான்.

"சீ! ஏண்டா உனக்கு என்மேல் இத்தனை கோபம்? எட்டணாவாவது வேண்டுமே, இன்னும் நாலணா கிடைத்ததா என்று கேட்டேன். என்னிடமிருந்தால் முழுக்கக் கொடுத்திருக்க மாட்டேனா?"

கந்தன் திரும்பவும் தன் சட்டைப்பைக்குள் அதைப் போட்டுக்கொண்டான்.

"வருகிருயா, உன் ஊருக்கே போய்வரலாம்? போக வர ஏழெட்டு மைல்தானே? இப்போது நாலு மணி. ஏழுக்கெல்லாம் சாப்பாட்டு மணி அடிப்பதற்குள் திரும்ப முடியாது? வா!" என்ருன் சுப்பையா.

கந்தன் அண்ணுந்து வானத்தைப் பார்த்தான்; அட்டைக் கரியாக அதை அப்பிக்கொண்டு வந்தது மழை மேகம். ஆற்று வெள்ளமே கறுப்பாய்தான் ஓடியது. எதிர்கரையில் தெரிந்த மாந்தோப்புக்களும் இருண்டு கிடந்தன.

"மழை வரும்போலிருக்கிறதே?"

"வந்தால் என்ன, கரைந்து போவோமா—இல்லே, செத்துப் போவோமா? வாடா போகலாம்."

"எனக்காக நீ ஏன் நனையவேண்டும்? நான் போகிறேன்; நான் சாப்பாட்டுக்கு வர நேரமானல் சத்திரத்தில் சொல்லிவை."

"இந்த வீம்புதானே ஆகாது! வா, போவோம்."

இருவரும் சிந்தாமணிப் பாலத்தைத் தாண்டி வேகமாய் நடந்தார்கள்.

சொக்கன் இப்போது மூக்கப்பட்டியைவிட்டுத் திருச்சிக்குப் பக்கத்தில் நாலு மைலிலுள்ள கிராமத்திற்கு வந்துவிட்டான். சொந்த ஊரில் வறுமையை ஏற்றுக்கொள்ள அவனுடைய சுயமரியாதை இடம் கொடுக்கவில்லே. கொல்லு வேலேயுடன் வீட்டில் இட்டிலி வியாபாரமும் நடந்தது. கந்தனின் தங்கை பொன்னம்மாள் அதை வெளியில் கொண்டுபோய் விற்றுவந்தாள்.

குடிமாற்றத்துக்கு மற்ருெரு காரணம், அந்த ஊர் திருச்சிக்குப் பக்கத்தில் இருந்தது. நினைத்தால் போய்க் கந்தனின் இங்கிலீஷ் வளர்ச்சியைக் கண்டுகொள்ளலாம். சனிக்கிழமை தவருமல் சொக்கனும் வந்துபோய்க்கொண்

டிருந்தான். வரும்போதெல்லாம் சில்லறைச் செலவுக்குக் கந்தனுக்குப் பணம் கிடைக்கும். —வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி, துணியைக் கட்டாத பணம்.

பிள்ளைகள் இருவரும் நடையை எட்டிப் போட்டார்கள். தலைமேல் மேகம் வேறு உச்சியில் நின்று கடமுடா வென்று கத்தி அவர்களைத் துரத்தி அடித்தது.

கந்தனைவிட சுப்பையாவுக்கு வயது அதிகம்; ஆனால் உருவம் சிறியது. அவனைவிட ஒல்லி; குட்டை; சிவப்பு. அப்போதைக்கு நாலணா அதிகப் பணக்காரன்.

"ராமையா வாத்தியார் எவ்வளவு நல்லவர்! அவரைப் போல ஒரு வாத்தியாரை நான் பார்த்ததே இல்லையடா!"

"நானுந்தான்!"

"அவர் நம்ப பள்ளிக்கூடத்தை விட்டுப் போறது எனக்கு ரொம்ப வருத்தமா இருக்குடா!"

"எனக்குந்தான்!"

"அவருக்கு ஒரு விருந்துகூட வச்சு அனுப்பலேன்னா, அவர்கிட்டே படிச்சதுக்கு என்னதான் மரியாதை?"

"கட்டாயம் செய்யணும்."

"விருந்துக்கு என்னென்ன போடப்போகிறோம்?"

"கோதுமை அல்வா, உளுந்து வடை, காப்பி."

அல்வாவின் பெயரைக் கேட்டவுடன் கந்தனின் வாயில் எச்சில் சுரந்தது; தித்தித்தது. தட்டுதட்டாய்க் கடைவீதிகளில் அல்வாவையும், அதைக் காலி செய்கிற மனிதர்களையும் கண்டிருக்கிறானே தவிர, அவன் வாயில் அது இதுவரை கரைந்ததில்லை.

"போட்டோ எடுப்பதில் எனக்கும் ஒரு படம் வேணுண்டா!"

"விருந்துக்கே காசைக் காணோம்; படத்துக்குப் போயிட்டான்! அதைப் பின்னாலே பார்த்துக்கலாம்: இப்போ நாலணா வாங்கு, போதும்."

"நாலணு என்ன—ஒண்ணரை ரூபாய் வாங்கி அப்படியே கொடுக்கப்போறேன். விருந்துக்கு எட்டணு; படத்துக்கு ஒரு ரூபாய்; நீ கொடுத்த நாலணு உனக்கு."

ராமையா வாத்தியார் மாற்றலாகிப் போகிருர். பள்ளிப் பிள்ளைகளிடம் அவருக்கு அளவற்ற பிரியம். அன்பு செலுத்துவதில் அவருக்குப் பாரபட்சம் செய்யத் தெரியவில்லை. அழுக்குச் சட்டை போட்ட பிள்ளைகளையும், ஏழைப் பிள்ளைகளையும், அழகற்ற பிள்ளைகளையும், அவர் பிள்ளைகளாகவே மதித்தார். இன்னும் ஆச்சரியம், இலவசப் படிப்புப் படிக்கிற பிள்ளைகளைப் பார்த்து, "தண்டச் சோற்றுத் தடி ராமன்களா!" என்று அவர் கூப்பிடவில்லை.

கந்தனுக்கு மற்ெருரு மூஞ்சூறைப் பற்றி அப்போது நினைவுக்கு வந்தது. அது காரணமில்லாமல் அவனை அடித்தது; வைதது; திட்டியது. உருவத்தையும் நிறத்தையும் கேலி செய்தது—படித்தாலும் சரி, படிக்காவிட்டாலும் சரி.

"அந்தச் சிடுமூஞ்சிப் பிச்சு நான் படித்தால்கூட என்னை அடித்ததடா!"

"சிலபேரைக் கண்டாலே சிலபேருக்குப் பிடிக்கிறதில்லை. என்னடா செய்வது?"

ராமையா வாத்தியார் கந்தனுடைய கையில் காலணுக்கூட இல்லாதபோதுதாஞ மாற்றிப் போகவேண்டும்? வகுப்புப் பிள்ளைகள் அவருக்கு விருந்து வைக்க முடிவு செய்தது திடீர் ஏற்பாடு. விருந்துக்கு மட்டும் என்ருல் எட்டணு; படம் வேண்டுமென்ருல் ஒரு ரூபாய் கூட. கந்தன் காசுக்குத் தகப்பனுரை எதிர்பார்த்தான். சனிக்கிழமை வரவேண்டிய சொக்கனுக்குப் பதில் ஞாயிற்றுக்கிழமைதான் சும்மா வந்தது.

கடன் கொடுக்கும் நிலையில் உள்ளவர்களோ, விருப்பமுள்ளவர்களோ கந்தனுக்கு யாருமில்லை. சுப்பையாவின் அதிகப் பணம் நாலணு மட்டும் முன்பே வந்து

விட்டது. சுப்பையாவுக்குச் சாப்பாடு போதும்; படம் தேவை இல்லை.

கந்தனுக்கு விருந்தில் கலந்துகொள்ளவே இன்னும் நாலணு வேண்டும். விருந்தையா விடுவது? 'ராமையா வாத்தியார், கோதுமை அல்வா, உளுந்து வடை, காப்பி....'

வானத்தின் உருட்டலுக்கும் மிரட்டலுக்கும் அஞ்சிச் சிறுவர்கள் கிராமத்தை அடைந்தார்கள். பாதிவழி நடை; பாதிவழி ஓட்டம்.

அங்கே கொல்லுப்பட்டறை தூங்கிக்கொண்டிருந்தது. அதன் நெஞ்சில் நெருப்பில்லை. கரியும் சாம்பலும் காற்றில் பறந்தன. ஒரு மூலையில் துருப்பிடித்த இரும்புகள், பழைய பட்டாக்கள், நெளிந்த வளையங்கள், உடைந்த சக்கரங்கள் கேட்பாரற்றுக் கிடந்தன. பட்டறையெங்கும் புழுதி மயம்.

கந்தனுக்குப் பகீரென்றது.

பக்கத்தில்தான் வீடு. கந்தன் கோபத்துடன் வீட்டுக்குப் போனுன். வெளியில் ஒருபுறம் பெரிய திண்ணை; இன்னொரு புறம் ஒட்டுத் திண்ணை. பெரிய திண்ணையை மறைத்திருந்த கந்தல் சாக்கும் கீற்றுத் தட்டியும் காற்றில் ஓங்கி, ஓங்கி அடித்துக்கொண்டன. திண்ணையின் ஓரத்தில் கிழிந்த பாயில் பழைய சேலையை இழுத்துப் போர்த்துக்கொண்டு ஓர் உருவம் முடங்கிக் கிடந்தது. அது அவனுடைய அப்பன் சொக்கன்.

"வா, கந்தா! வா தம்பி! —ஏ பொன்னம்மா! கந்தன் வந்திருக்கான், போய் உன் ஆத்தாளைக் கூட்டிவா. அடுத்த வீட்டுக்கு மா அரைக்கப் போயிருப்பா."

போர்வையை உதறிவிட்டுச் சிரமத்துடன் எழுந்து உட்கார்ந்தான் சொக்கன். தங்கை பொன்னம்மாள், அடுப்பில் சோற்றைக் கொதிக்கவைத்துக்கொண்டிருந்தவள், தாயைக் கூப்பிட வெளியில் சென்ருள்.

"ஏண்டா தம்பி, இங்கிலீசை நல்லாப் படிக்கிறியா? எனக்குத்தான் நாலு நாளாய்க் காய்ச்சல். படுத்த படுக்கைதான்...." — இருமியபடி பக்கத்திலிருந்த கொட்டாங்கச்சிச் சாம்பலில் துப்பினன்.

"இப்போ எனக்கு அவசரமா ஒண்ணரை ரூபாய் வேணும். அதுக்குத்தான் வந்தேன். உடனே திரும்பணும்."

"ஒண்ணரை ரூபாயா!"

எடுத்த எடுப்பில் கழுத்தை அறுப்பதுபோல நோயாளியிடம் பணம் கேட்டது நண்பன் சுப்பையாவுக்கு வெறுப்பைத் தந்தது.

"ஹூம், ஒண்ணரை ரூபாயா வேணும்!" என்று முனகினன் சொக்கன். பிறகு இரு கைகளாலும் தலையைப் பிடித்துக்கொண்டு பின் சுவரில் சாய்ந்துவிட்டான். "ஒண்ணரைக் காசுக்கு இங்கே வழியைக் காணோம்."

அரைத்தமாவைப் பாதியில் துணி போட்டு மூடிவிட்டு, கழுவிய கையுடன் அவன் அம்மா வந்து சேர்ந்தாள். விஷயத்தை அவளிடம் விளக்கமாகக் கூறினன் கந்தன்.

அவளும் விஷயத்தை விளக்கமாகக் கூறினுள்: "இவர் படுத்து நாலு நாளாச்சு. இட்டிலி வியாபாரத்தில்தான் இந்த மூணு உசிரும் ஒட்டிக்கிட்டிருக்கு. வித்த பணத்துக்கு அரிசி வாங்கிப் பாதியை மா அரைச்சாச்சு; பாதியை உலையிலே போட்டாச்சு. அரிசியா இருந்தாலும் ஒண்ணுக்குப்பாதியா அதை வித்து உனக்குப் பணம் தருவேன். வஞ்சகமில்லேடா தம்பி! காலையிலே அவிச்ச ரெண்டு இட்டிலி பாக்கி இருக்கு. ஆளுக்கொண்ணைச் சாப்பிட்டுவிட்டுப் போங்க. ரெண்டு நாளையிலே காலோ அரையோ கையிலே கிடைக்கிறதைக் கொடுத்தனுப்பறேன்."

"இட்டிலியைக் கொண்டு போய்க் குப்பையில் போடு! எனக்குப் பணம்தான் வேணும்—ஒண்ணரை, இல்லாட்டி அரை. இல்லாட்டிக் கால்ரூபாயாச்சும் கொடு."

கால்ரூபாய்க்கு இறங்கி வந்ததில் அவர்களுக்குப் பரமதிருப்தி. ஆனால் அதற்குத்தான் இப்போது எங்கே போவது?

செம்பில் தண்ணீர் கொண்டுவந்து வைத்து, ஆளுக்கொன்றாய் இட்டிலியைத் தட்டில் நீட்டினாள் தாயார். கந்தனின் தட்டு உடனே உள்ளே பறந்தது. சுப்பையாவும் சாப்பிடவில்லை. நண்பன் சாப்பிடாதபோது அவன் மட்டும் சாப்பிடலாமா? பசி வயிற்றைக் கிள்ளியது. அதைத் தண்ணீர் குடித்து அமர்த்தப் பார்த்தான் சுப்பையா. நடந்த களைப்பு.

"கந்தா, சாப்பிடு! போய் அக்கம்பக்கத்தில் கேட்டுப் பார்க்கிறேன்."

"போய் வாங்கிட்டு வா; சாப்பிடுறேன்."

தாய் வெளியில் சென்றாள். தங்கை ஏதோ சட்டி பானைகளை உருட்டிக்கொண்டிருந்தாள். தகப்பன் பரிதாபமாகத் தன் மகனைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

பார்த்துக்கொண்டே, "அக்கம்பக்கத்தில் அறுத்த கைக்குச் சுண்ணும்பு கொடுக்கமாட்டாங்க!" என்று காறித் துப்பினான். "கடனுக்குக் கடையாணி போட்டால் தொழில் நடக்கும்; கடன் கொடுத்தால் இட்டிலி வியாபாரம் நடக்கும். காசு மட்டும் கேட்கப்படாது, ரோஷம் வரும்!"

தாயார் திரும்பி வந்தாள்—வெறுங்கை, அழுத கண், சிந்திய மூக்கு.

"மனுஷங்க குடியிருக்கிற ஊரில்லை இது; பிசாசுகள் குடியிருக்கிற சுடுகாடு!"

கந்தன் வாயில் வந்தபடி தன் தாயாரையும் தகப்பனையும் திட்டினான். கன்னா பின்னா என்று கத்தினான். எதுதான் பேசுவது பேசக்கூடாது என்றில்லை. "காசில்லாத கபோதி எதுக்கு மகனைப் படிக்க வைக்கணும்? நாலணாக் காசுக்கு வழியில்லே, இங்கிலீஷாம் இங்கிலீஷ்!

—எழுந்திரடா, போகலாம்; சத்திரத்துச் சோற்றிலே மண் விழுந்திடப் போகுது!"

தாயார் கையைப் பிடித்துக் கண்ணீர் சொரிந்தாள். தகப்பன் கெஞ்சினுன். தங்கை "கொஞ்சநேரம் இருந்துட்டுப் போ அண்ணு!" என்று மன்ருடினுள்.

ஒன்றையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை கந்தன். நண்பனை இழுத்துக்கொண்டு தெருவில் குதித்தான்.

காத்துக்கொண்டிருந்ததுபோல் வானமும் அநியாயம் செய்தது. மின்னல்கள் மேகத்தின் இருதயத்தைப் பிளந்து உதிரம் கொட்டச் செய்தன. சரேல் சரேலென்று அடித்து வீசும் பெருமழை; அத்திக்காய் ஆலங்காய் விழுகிற மாதிரி பெரிய பெரிய தண்ணீர்க் குண்டுகள் மேலே விழுந்தன.

வெந்துகிடந்த மண்ணின் வாசனையை மழை கிளறிவிட்டது. சுழன்று அடித்தது காற்று. சாலையின் இருபுறத்து மரங்களும் வீறிட்டுக் கதறின. சிறுவர்கள் இருவரும் பயத்தால் ஒருவருடன் ஒருவர் ஒட்டிக்கொண்டு ஓடினுர்கள்.

பள்ளிக்கூடத்தின் ஓட்டப்பந்தயத்தில்கூட அவர்கள் இப்படி ஓடியிருக்க மாட்டார்கள்.

காற்ருேடு காற்ருய்ப் பின்னுல் ஒரு மனிதக் குரல் கேட்டது. தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருந்தது; சுப்பையா அதை உற்றுக் கேட்டான்.

காற்றின் உறுமலையும் அது ஊடுருவிக்கொண்டு ஒலித்தது: "அண்ணு!....அண்ணு!....அண்ணேவ்!"

சற்றுநேரத்திற்கெல்லாம் உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை தண்ணீர் சொட்ட அங்கே பொன்னம்மாள் தென்பட்டாள். மேல்மூச்சுக் கீழ்மூச்சு வாங்க வந்து நின்ருள்.

"இதை அடுக்குப் பானையிலே வச்சிட்டுத் தேடாத இடமெல்லாம் தேடினேன். இப்பத்தான் அண்ணு கிடைச்சுது, இந்தா!"

ஆசையுடன் கைநீட்டி வாங்கினான் கந்தன். ஆனால், அது நாலணா இல்லை; காலணா! வெள்ளியில்லை; செம்பு! அழுக்குப் பிடித்த பழைய காசு!

கந்தனுக்கு வெறிபிடித்துவிட்டது. பிதுங்கும் கண்களால் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். கண்களில் அவனுக்கு மின்னல் வெட்டியது. சிரிப்பில் இடி இடித்தது.

கைக்கு வந்த வேகத்தில் அதைத் தூக்கி எறிந்தான்.

"சீ கழுதை! உன் அருமை அண்ணனுக்கா காசு கொடுக்க வந்திட்டே? என்னைக் கேலியா செய்யிறே? நாலணாக் கேட்டால், காலணாவா! திமிரைப் பார், திமிரை!"

பளீர், பளீர், பளீர்! — அவள் கன்னம் பழுத்து விட்டது.

"ஓடு! திரும்பிப் பார்க்காமல் ஓடு! இங்கே நின்றியோ, இதே இடத்தில் கொலை நடக்கும், போ!"

தள்ளாடிக்கொண்டே அவள் திரும்பிப் போனாள். மழைத் திரையில் அவள் உருவம் புகையாய்த் தெரியு மட்டும் பார்த்துக்கொண்டு நின்றான் கந்தன். அதே இடத்தில் அவன் நின்றான்.

மின்னல் வெட்டிற்று; இடி இடித்தது; காற்றடித்தது; அவன் நின்றான்.

சுப்பையாவுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. "ஏண்டா! நீ மனிதன்தானா? தாயிடம் பாசமில்லை, தகப்பனிடம் மதிப்பில்லை, தங்கையிடம் அன்பில்லை. நீ மிருகத்திலும் கேவலம்! வெறிபிடித்த நாய்!"

நிமிர்ந்த தலையைக் குனிந்தான் கந்தன். விறைப்புடன் இருந்த அவன் கை கால்கள் கட்டுவிட்டுத் தளர்ந்தன. ஓங்கி ஓங்கித் தன் முகத்திலேயே அறைந்துகொண்டான்.

"சுப்பையா, நீ மட்டும் போ. என்னால் அங்கே படிக்க வரமுடியாது. நான் வரமாட்டேனென்று போய்ச் சொல்லிவிடு."

சுப்பையா அசையவில்லை. போகாமல் நின்ருன். கந்தனுக்குத் திரும்பவும் கோபம் வந்துவிட்டது.

"போடா என்ருல் போ! இந்தா உன் நாலணு! எடுத்துக்கொண்டு போ! கையில் காசு இருக்கிறவனுக்குத் தாண்டா ஆசையும் பாசமும்! ஏண்டா நிற்கிறே? என்னை விட நாலணு உன் கையிலே அதிகமா இருக்கிறதனுலே தானே நீ எனக்குப் புத்தி சொல்ல வந்துட்டே? போ! போகாட்டி உன்னையும் அறைவேன், போ!"

அவனைப் பிடித்து வேகமாய்த் தள்ளிவிட்டான்.

பிறகு, அடிவயிற்றைச் சுண்டி இழுக்கும் பெருங் குரலில், "பொன்னம்மா! பொன்னம்மா! பொன்னம்மா!" என்று கத்திக்கொண்டே கிராமத்துப் பக்கம் ஓடினன்.

மழை பெய்தது; இடி இடித்தது; காற்றடித்தது. அந்தப் பாசம் பிடித்த காலணு சேற்றில் புதைந்துகொண்டது —உள்ளவனும் இல்லாதவனும், கடைசியில் போய்ச் சேருகிறதைப் போல.

# வாழையடி வாழை

இரவு எட்டரை மணிக்குமேல் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் திருச்சி சந்திப்பில் வந்து களைப்பாற நின்றது. திருநெல்வேலிப் பெட்டியிலிருந்த ரத்தினசாமி தம்முடைய மூன்று வயதுப் பையன் ராமலிங்கத்தைத் தூக்கிக்கொண்டு கீழே இறங்கினர். ஒவ்வொரு பெட்டியாக அவரைத் தேடிக்கொண்டிருந்த ஓர் அன்பர் முகமலர்ச்சியோடு அவருக்கு மாலை அணிவித்து வரவேற்றார். பெட்டியைத் தம் கையில் வாங்கிக்கொண்டு வெளியே நின்றிருந்த காருக்கு ரத்தினசாமியை அழைத்து வந்தார்.

திருச்சியிலிருந்து பத்து மைல் தூரத்தில் காவேரிக் கரையிலிருந்த ஒரு கிராமச் சங்கத்தின் ஆண்டு விழா. அதற்காகத் திருநெல்வேலியிலிருந்து ரத்தினசாமியைத் தலைமை வகிக்க அழைத்திருந்தார்கள். கல்லூரி ஒன்றில் பேராசிரியராக இருந்த ரத்தினசாமி சிறந்த சிந்தனையாளர். பேச்சிலும், எழுத்திலும் செயலிலும் அவர் மக்களுக்குத் தொண்டாற்றி வந்தார்.

காரின் பின்னிடத்தில் பையனும் ரத்தினசாமியும் அமர்ந்துகொண்டார்கள். முன்னால் டிரைவருக்குப் பக்கத்தில் அழைக்க வந்த அன்பர் உட்கார்ந்திருந்தார். கார் புறப்பட்டது. யாரும் அதிகமாய்ப் பேசிக்கொள்ளவில்லை.

திருச்சி நகரத்தின் மத்தியை இரண்டாகக் கிழித்துக்கொண்டு கார் வடக்குக் கோடிக்கு வந்துவிட்டது. அடுத்தாற்போல் மேலச் சிந்தாமணி என்ற திரிசங்கு சொர்க்கம். கிராமத்திலும் சேராத நகரத்திலும் சேராத இரண்டுங் கெட்டான் திட்டுப் பகுதி. காவேரியில் வெள்ளம் வந்துவிட்டால் தண்ணீரில் மிதக்கும் பெரிய தெப்பம் போல் காட்சியளிக்கும் பிரதேசம் அது.

மேலச் சிந்தாமணிக்குள் கார் நுழைந்தவுடன், "கொஞ்சம் மெதுவாய்ப் போங்கள்" என்றார் ரத்தினசாமி, டிரைவரிடம்.

காரின் வேகம் குறைந்தது. ரத்தினசாமி இருபுறமும் கவனித்தார். பெரும்பாலும் கூரைவீடுகளும் குடிசைகளுமே தென்பட்டன. இந்த இருபது வருஷத்தில் திருச்சியும் அதன் சுற்றுப்புறங்களும் எத்தனையோ மாற்றங்களைக் கண்டுவிட்டன. ஆனால் மேலைச் சிந்தாமணிக் கடைசியிலிருந்த அந்தத் தெருவில் மட்டும் அதிக மாற்றமில்லை. ஓரிரண்டு வீடுகள் ஓடு போர்த்துக்கொண்டிருந்தன; ஓரிரண்டு வீடுகள் கூரையே இல்லாமல் நிர்வாணமாய் நின்றன.

கழுத்தை நன்றாக வெளியே நீட்டி ஏதோ ஒரு வீட்டைக் குறிப்பாகக் கவனித்தார். அந்த வீடு முன்போலவே இருந்தது.

"கொஞ்சம் நிறுத்துங்கள்."

கார் சரியாக அந்த வீட்டு வாசலை ஒட்டி எதிரே நின்றது. தரையிலே தாழ்ந்து விழப்போவதுபோல் கவிழ்ந்திருக்கும் கூரை. நான்கடி உயரத்தில் அதைத் தாங்கி நிற்கும் மண்சுவர். பாதி திறந்திருந்த கதவிடுக்கின் வழியாகச் சிமினி விளக்கின் மங்கலான வெளிச்சம் வெளியே எட்டிப் பார்த்தது.

ரத்தினசாமி காரில் இருந்தபடி அந்த வீட்டைக் கையெடுத்துக் கும்பிட்டார். அவருடைய மெய் சிலிர்த்தது. பக்கத்திலிருந்த ராமலிங்கத்தை இறுக அணைத்துக் கொண்டு, "ராஜா, எங்கே கும்பிடு!" என்றார்.

"எங்கே அப்பா? ஏன்?"

"அதோ, அங்கு வெளிச்சம் தெரிகிறதே!"

"எதற்கப்பா?"

"உன் தாத்தா இருந்த வீடடா ராஜா!"

பையன் கையெடுத்துக் கும்பிட்டான். அவனைத் தூக்கி மடியில் விட்டுக்கொண்டு, "போகலாம்" என்றார் டிரைவரிடம். கார் பறந்தது.

அது அவருடைய தகப்பனார் கடைசியாக இருந்த வீடு; இறந்த வீடு.

கீழே இறங்கிப்போய் அந்த வீட்டு உள்திண்ணையின் ஓரத்தில் அவர் சிரம் தாழ்த்தி வணங்க நினைத்தார். அந்த மண்ணில் ஒரு துளி எடுத்துத் தம் பையனின் நெற்றியி லிட விரும்பினர். ஆனல், அந்த வீட்டிற்கு இருபது வரு ஷங்களுக்கு முன்பு சொந்தக்காரர்களாயிருந்த கிழவனும் கிழவியும் இப்போது இருக்கமாட்டார்கள். அவர்களுக்குப் பிறகு அது எத்தனை கைமாறிற்றோ? இவருடைய செய்கை அங்கிருப்பவர்களுக்குப் பைத்தியக்காரத் தனமாய்ப் படாதா?

அந்த வீடு ரத்தினசாமியின் நினைவுகளைக் கிளறிவிட் டதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. அவருடைய தந்தையின் பெயர்தான் ராமலிங்கம். அதையே தம் மகனுக்கும் வைத்திருந்தார்.

ரத்தினசாமி செல்வத்தின் மத்தியில் செல்லப்பிள்ளை யாக வளர்க்கப்பட்டவர். தந்தை அவரைப் பள்ளிக்கூடத் தில் கொண்டுபோய் முதல்நாள் விட்ட காட்சியை அவரால் மறக்கவேமுடியாது. ராமலிங்கம் அந்தத் தெருவுக்கே அதை ஓர் திருவிழாவாகக் கொண்டாடினர். எல்லோருக் கும் அழைப்பு; எல்லோருக்கும் விருந்து; எல்லோருக்கும் உபசாரம். பிரபல நாதஸ்வர வித்வான் இசை பெருக்க, மல்லிகையால் வெள்ளை மயில்போல் அலங்கரிக்கப் பெற்ற காரில் ரத்தினசாமியைப் பள்ளிக்கு ஊர்வலமாய் அழைத்துச் சென்றார்கள். பள்ளிச் சிறுவர்களுக்கு அன்று ஒரே கும்மாளம். மிட்டாய்கள், சாக்லெட்டுகள், காப்பரிசி!

ஆனல் பத்து நிமிஷங்கூடப் பிள்ளை பள்ளியில் தங்க வில்லை. அப்பா ஒருபுறமும் அம்மா ஒருபுறமும் தன்னோடு உட்கார்ந்து பாடம் சொல்லிக்கொண்டால்தான் தானும் சொல்லிக்கொள்ள முடியும் என்று பிடிவாதம் பிடித்தான். அவனுக்காக அப்பாவும் அம்மாவும் 'அ' எழுதினர்கள்.

இன்னெரு சம்பவம் ரத்தினசாமிக்கு ஞாபகம் வந்தது.

பையன் ரத்தினசாமி வெளித் திண்ணையில் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். அப்பா கையில்

ஒரு சீப்பு வாழைப்பழத்துடன் காம்பவுண்டுக்குள்ளே நுழைந்தார். வெளி வாசலுக்கருகில் கட்டியிருந்த பசுங் கன்றுகுட்டி, அவர் கையில் பழத்தைக் கண்டவுடன் 'அம்மா' என்று வாலைச் சுழற்றிக்கொண்டு தாவியது. இரண்டு பழங்களைப் பிய்த்து அதனிடம் நீட்டிவிட்டு அவர் உள்ளே நுழைந்தார்.

சற்றுநேரம் கழித்து ராமலிங்கம் தம்முடைய நண்பர் களின் மத்தியில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும் போது ஒரு சிறு அதிசயம் நடந்தது. தனக்குக் கொடுத்த பழங்களையும் காபியையும் பையன் பத்திரமாக அப்பா விடம் கொண்டுவந்தான். பழங்களை உரித்து அப்பாவின் முகத்தில் வீசினன். காபியை மடமடவென்று அவர் தலை யில் கொட்டினன். நண்பர்கள் திகைத்துவிட்டார்கள். ராமலிங்கம் அவனை வாரி எடுத்துக்கொண்டு விழுந்து விழுந்து சிரித்தார்.

“என்ன தம்பி கோபம்?”

“நீங்கதான்....முன்னலே....எனக்குக் குடுக்காமல்.... கன்னுக்குட்டிக்கு....பழம் குடுத்தீங்களே!”

கன்றுகுட்டிக்குக் கொடுத்ததில் அவனுக்குக் கோப மில்லை. முன்னல் கொடுத்ததில்தான் ஆத்திரம். அந்த வீட்டில் அவன்தான் முதல்!

“ஆமாம் தம்பி, நான் செய்தது தப்புத்தான்!”

'தம்பி' என்றுதான் ராமலிங்கம் அவனை அழைப்பது வழக்கம். மற்றவர்கள்கூட அவனை 'வாடா போடா' என்று கூப்பிட்டால் அவருக்குப் பிடிக்காது.

தாயாரை அவன் பம்பரமாய் ஆட்டி வைத்தான். வேலைக்காரர்களிடம் வேடிக்கையும் செய்தான்; வேதனை யும் தந்தான். தகப்பனரைப் பாதிராத்திரியில் எழுப்பித் தன் கனவில் கண்ட பொருளையெல்லாம் கொண்டுவரச் சொன்னன். படுக்கப் போகும்போது அவனுக்குத் தலைமாட்டில் ரொட்டிப் பெட்டி, கால்மாட்டில் காபி, பக்

கத்தில் பலகாரம். இத்தனையிலும் அவனுக்குத் திருப்தி யில்லை.

ராமலிங்கத்திற்கு நாற்பது வயதுக்கு மேல் பிறந்த ஆசைக் குழந்தை அவன். கோயில், குளம், ஆறு, மலை, வைத்தியம், சோதிடம் எல்லாம் பொய்த்துப்போனபின், நம்பிக்கை வரட்சியின் எல்லைக்கோட்டில் அவன் பிறந்தான். அவரால் அவனை வேறுவிதமாக வளர்க்கத் தெரியவில்லை. அவர் பணக்காரர்; ஆனால் பரோபகாரி. அவனுக்குப் பிறகு அவருக்கு ஒரு பெண்குழந்தையும் பிறந்தது.

ரத்தினசாமி பிறக்கும் வரையில் அவருக்கு நாளைக்கு வேண்டுமே என்ற கவலையே கிடையாது. பிறர் துன்பம் கண்டு இளகக்கூடிய மனதுள்ளவர்களிடம் பணமும் இருந்துவிட்டால் கேட்கவா வேண்டும்? அவர் தம் மகனின் எதிர்கால வாழ்வைப்பற்றி நினைப்பதற்குள் அவருடைய சொத்தில் பெரும்பகுதி கரைந்துவிட்டது.

ஆனால் எப்படியும் ரத்தினசாமியைக் கஷ்டந் தெரியாமல் வளர்க்கவேண்டும்; அவனை அன்புள்ளவனாகவும், அறிவாளியாகவும், நல்ல மனிதனாகவும் உருவாக்கவேண்டும் என்று ராமலிங்கம் அவனை அடிக்கடி வெளியே அழைத்துச் சென்று வெளிஉலகத்து மக்களின் வாழ்க்கை நிலையையும் காண்பித்தார். என்றாலும் மனத்தில் ஆழப் பதிந்து புரியக்கூடிய வயது அதல்லவே?

இரண்டு மூன்று மைல்கள் ஊரைக் கடந்து வந்துவிட்டது கார். ஒருபக்கம் காவேரிக் கரை மேடும், மறுபக்கம் நெல்வயல்களும் இருண்டு கிடந்தன. திடீரென்று வானத்தில் கடமுடாவென்று சப்தம் கேட்டது. வானம் பிளந்து கொண்டு மழை கொட்டப்போகிறதா?

இன்று போலத்தான் அன்றும் வானம் பயங்கரமாய் உறுமியது:

ராமலிங்கம் வெளியூர் போயிருந்தார். அவர் தம் கிராமத்தை விட்டுத் திருச்சிக்கு வந்து சில தினங்களே ஆகியிருந்தன. திருச்சியில் புதிதாகக் கட்டிய பெரிய

வீட்டுக்கு அவர் குடிவந்திருந்தார். பையன் பிறந்த பிறகு அவருக்குள்ளே வளர்ந்த ஆசைமாளிகையின் சின்னம் அந்த வீடு. கையிலிருந்த ரொக்கம், நன்செயை விற்றது, நகைநட்டுக்கள், நண்பர்களிடம் பெற்ற கடன் இத்தனை யும் சாப்பிட்டு அந்த வீடு நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்தது.

பாதியில் வேலை நடக்கும்போது, தம்முடைய பையனை அழைத்துக்கொண்டு வந்து ஒவ்வொரு இட மாகக் காட்டுவார். “இது நீ படிக்கும் அறை; இது நீ விளையாடும் கூடம்; இது நீ படுக்கும் அறை; இங்கேதான் நீ சாப்பிடுவாய்; இங்கே நீ குளிப்பாய்; இங்கே நீ சைக்கிள் விடுவாய்....”

எல்லாம் ஒரே நீ, நீ, நீ மயந்தான்.

வீட்டிற்குக் குடிவந்த பிறகும் இன்னும் கொஞ்சம் சில்லரை வேலைகள் பாக்கியிருந்தன. வெளியூரிலிருந்து திரும்பியவுடன் அதை முடித்துவிடத் தீர்மானித்தார். ஆனால் எத்தனைபேர் இமயத்தின் சிகரத்தருகே போகும் சமயம், அதை எட்டிப்பிடிக்க எத்தனிக்கும் விநாடியில், கைதவறிக் கீழே விழுந்து அதலபாதாளத்தில் அழுந்தி யிருக்கிறார்கள்?

இயற்கைத் தேவிக்கு அன்று வெறிபிடித்துவிட்டது.

கருந்திரளான மேகக் கூந்தலை விரித்துக் கோரச் சிரிப்புக்களான மின்னல் கீற்றுகளை வீசி, கண்ணீர் மழை பொழிந்து அந்தச் சுற்றுவெளியெல்லாம் ஊழிக்கூத்தாடி னாள். சரியாக நள்ளிரவில் ‘சட்டுச் சடசடார்’ என்ற பேரொலியுடன் வீட்டுக் கொல்லைப்புறச் சுவர், சமையற் கட்டுச் சுவரின்மேல் சாய்ந்து சரிந்தது....வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள் ராமலிங்கத்தின் மனைவி. இரு குழந்தைகளையும் அணைத்துக்கொண்டே எதிர்வீட்டில் புகலிடம் தேடினாள். முக்கியமான சாமான்கள் சில வற்றை மட்டும் அப்புறப்படுத்த அக்கம்பக்கத்தில் உதவினார்கள்.

பொழுது விடிந்தது. ஆனால் வானம் வெளுக்கவில்லை. பாதி வீடுதான் அங்குப் பரிதாபமாய் நின்றது.

மூன்று நாட்கள் அந்த மழை ஓயவில்லை. நான்காவது நாள் ராமலிங்கமும் திரும்பி வந்தார். அங்கே அவர் கண்ட காட்சி!

ரத்தினசாமியால் மறக்கமுடியாத ஒன்று அது. சின்னஞ் சிறு பையனாக தன்னை அப்பா கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் முழுக்க முழுக்க இடிந்து போன அந்தப் பாழ்மனையைப் பார்த்த காட்சியை அவர் எப்படி மறக்கமுடியும்? கிட்டத்தட்ட சமதரையாக இருந்தது அந்த மனமாளிகை. ஒடிந்துபோன மரங்களும், வளைந்துபோன இரும்புகளும், சிதறிப்போன செங்கல்லும் ராமலிங்கத்தைப் பார்த்துச் சோகமாய்ச் சிரித்தன.

"நான் படிக்கிற அந்த அறை எங்கேப்பா?" என்று பையன் கேட்டான்.

அவருக்கு ஆவேசம் வந்துவிட்டது. பையனை இரு கைகளிலும் உயரத் தூக்கி அவன் கண்களை உற்றுப் பார்த்தார். அவரது உதடுகள் துடித்தன; கண்கள் கலங்கின; அப்படியே அவனை வலது தோளில் சாய்த்துக் கொண்டு இடது கரத்தால் தம்முடைய நெஞ்சில் ஓங்கி ஓங்கி அடித்துக்கொண்டார்.

"இங்கே இருக்கிறது தம்பி, உன் படிப்பறை! இங்கே இருக்கிறது!"

நெஞ்சுக்குள்ளே இருந்த அந்தப் படிப்பறைகூட உடைந்து சுக்குநூறாகிவிடும்போலிருந்தது அவர் அடித்துக்கொண்ட வேகத்தில்.

அதன் பிறகு எல்லாம் வேகமாக நடந்தன. முதலில் ராமலிங்கம் படுக்கையில் விழுந்தார்; அடுத்தாற்போல் கடன்காரர்கள் நெருக்கினார்கள்; அதையடுத்து இருந்ததையெல்லாம் விற்றுச்சுட்டுக் கடனடைத்தாயிற்று. குடும்பத்தை மனைவியின் பிறந்தகத்திற்கு அனுப்பிவிட்டு எங்கோ வடக்கே கிளம்பினார் ராமலிங்கம்.

"தம்பியை நன்றாகக் கவனித்துக்கொள். அக்கறையுடன் படிக்கச் செய். கஷ்டம் தெரியாமல் அவன் வளர வேண்டும்" என்று சொல்லிச் சென்றார்.

மாதாமாதம் கடிதம் எழுதினார். பணம் கிடைத்த போதெல்லாம் அனுப்பினார். வருடம் ஒருமுறையாவது வந்து பார்த்துப் போனார். எந்த ஊரில் என்ன வேலை பார்த்தார் என்பது நிச்சயமில்லை. அவருடைய மாமனார் வீட்டிலும் ஏழைகள்தாம். அதனால் அவர்களுக்கும் அவர் அதிகச் சுமை கொடுக்க விரும்பவில்லை.

வந்து தங்குகிற சில நாட்களிலும் எப்போதும் பையனின் அருகில் இருக்கவே பிரியப்பட்டார். அவனை அழைத்துக்கொண்டு வெளியே உலவப் போகவேண்டுமென்று அவருக்கு ஆவல். ஆனால் ரத்தினசாமிக்கு விவரம் தெரியத் தெரிய ஏனோ அப்பாவைக் கண்டால் பிடிக்கவில்லை. அவர் அனுப்பும் பணந்தான் அவனுக்குத் தேவை: அவர் தேவையில்லை. அவர் எதிரிலேயே மரியாதைக் குறைவாக நடந்துகொண்டான். அலட்சியமாய்ப் பேசினான். இதற்காக அவருக்கு அவனிடம் அன்பு குறையவில்லை. தாம் அருகில் எப்போதும் இருந்து கவனிக்கக்கூடிய காலம் வந்தால் எல்லாம் சரியாகிவிடும் என்று நம்பினார்.

வீட்டுக்குள்ளே வளர்ந்த வறுமையின் சரித்திரத்தின் அரிச்சுவடிகூட ரத்தினசாமிக்குத் தெரியாது. வெள்ளை வேஷ்டி, சலவைச் சட்டை, பணக்காரப் பிள்ளைகளுடன் பகட்டான நட்பு. எப்போதும் அவனுடைய செலவுக்குக் கையில் காசு குலுங்கியது. அம்மாவும் பாட்டியும் கொடுப்பதைத் தவிர, அப்பா வேறு அவனுக்கு எப்போதாவது தனியே அனுப்பி வந்தார்.

ஆனால் அவன் படிப்பை மறக்கவில்லை; நல்ல பண்புகளை இழந்துவிடவில்லை. வீட்டில்தான் அதிகாரமும், பிடிவாதமும் முரட்டுத்தனமும் காண்பித்தானே தவிர, வெளியில் எல்லோருக்கும் நல்ல பிள்ளைதான்.

நீண்டநாள் தந்தையிடமிருந்து எதுவும் வராமலிருந்து, ஒருநாள் எதிர்பாராமல் அவனுக்குப் பள்ளிக்கூடத்திற்கு

மூன்று ரூபாய் மணியார்டர் வந்தது. கேவலம் மூன்று ரூபாய்! அதில், "இவ்வளவு குறைவாக உனக்கு அனுப்பு வதற்கு எனக்கே கஷ்டமாயிருக்கிறது. இப்போதைக்கு வைத்துக்கொள். உன் அம்மா எனக்கெழுதும் கடிதத்தில் உன் கையால் இரண்டு வரிகளாவது எழுது. ஏன் எழுதவே மாட்டேனென்கிருய்?" என்று குறிப்பிட்டிருந் தார்.

வந்துவிட்டது கோபம் ரத்தினசாமிக்கு. அப்பா அவனை யாரென்று நினைத்தார்! பத்தாவது படிக்கும் மாணவனுக்கு எந்த அப்பாவாவது போயும் போயும் மூன்று ரூபாய் அனுப்புவார்களா? மூளை இல்லை அவருக்கு! இருக்கட்டும்; சரியான பாடம் கற்பிக்கவேண்டும்!

ஆங்கிலத்தில் அழகாக 'மறுக்கப்பட்டது' என்று எழுதி அதைத் திருப்பினன். தாயாரிடம் அதை வந்து கூறியபொழுது அவள் ஏன் அப்படித் தேம்பித் தேம்பி அழுதாள் என்று அவனுக்குப் புரியவில்லை.

சரியாக ஒரு வாரம் சென்றபின் ரத்தினசாமியின் அறைக்குள் யாரோ தாடியும் மீசையுமாக ஒரு கிழவனர் உட்கார்ந்திருந்தார். அவருடைய பேச்சைத் தன் தாயார் கேட்டுக்கொண்டிருப்பது தெரிந்தது.

"தம்பிக்கு என்மேல் கோபம், பணத்தைத் திருப்பி விட்டான். நாற்பது நாளாய்த் தஞ்சாவூர் ஆஸ்பத்திரியில் கிடந்தேன். உனக்கு எழுதினல் வீண் கவலைப் படுவாய் என்று சும்மா இருந்துவிட்டேன். நல்ல வேளை, பிழைத்து எழுந்தாயிற்று. ஆனல் இன்னும் என்னை வெளியே அனுப்ப மறுத்துவிட்டார்கள். சொல்லிக்கொள்ளாமல் புறப்பட்டு வந்தேன். அவனுடைய கோபத்தை என்னல் பொறுக்கமுடியவில்லை. அவனைப் பார்ப்பதற்காகத்தான் வந்தேன்."

ரத்தினசாமி உள்ளே நுழைந்தான். ஒரு வார்த்தை அப்பாவை 'வாருங்கள்' என்று அழைக்கவில்லை. "உன் அப்பா வந்திருக்கிருர் தம்பி" என்ற தாயாரின் வார்த்தை யைக்கூட அவன் காதில் போட்டுக்கொள்ள மறுத்தான்.

கிழிந்த கோட்டும், அழுக்கு வேஷ்டியும், எலும்பும் தோலுமாயிருந்த அந்த உருவத்தைப் பார்ப்பதற்கே அவனுக்கு அருவருப்பாயிருந்தது.

ராமலிங்கம் தாம் கொண்டுவந்திருந்த கந்தலை அவிழ்த்து, அதற்குள்ளிருந்த காகிதப் பொட்டலத்தைப் பிரித்தார். ஆஸ்பத்திரியில் அவருக்குக் கொடுத்த ரொட்டித் துண்டுகளும் சர்க்கரையும் இருந்தன.

"தம்பிக்குக் கொடு; இதைத்தான் கொண்டுவர முடிந்தது."

அவன் அதைத் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை.

"இனிமேல் என்னல் தம்பியைப் பிரிந்து இருக்க முடியாது. அவனும் காலேஜில் படிக்கவேண்டும். அடுத்த வருஷத்திலிருந்து திருச்சிக்கே போய்விடுவோம். தெரிந்தவர்களிடம் சொல்லிச் சம்பளமில்லாமல் சேர்த்துவிடப் பார்க்கிறேன். ஏதோ ஒரு வழியாய் எல்லோரும் ஓர் இடத்திலிருந்து குடும்பம் நடத்துவோம். அலைந்தலைந்து எனக்கும் அலுத்துவிட்டது" என்ருர் ராமலிங்கம்.

பிற்பகல் ரத்தினசாமி பள்ளிக்கூடத்திற்குப் போகும் போது அவனுக்கு அங்கொரு விரும்பத்தகாத செய்தி காத்திருந்தது. ரெயில்வேயில் டிக்கட் பரிசோதகரா யிருந்த ஒருவருடைய பிள்ளை இதைச் சொன்னன்.

"உன் அப்பா டிக்கட் இல்லாமல் இன்றைக்கு ரயிலில் வந்தாராம்; என் அப்பா போனல்போகிறது பாவம் என்று விட்டுவிட்டாராம்."

நாக்கைப் பிடுங்கிக்கொள்ள வேண்டும்போலிருந்தது ரத்தினசாமிக்கு.

அடுத்த வருஷம் மீண்டும் குடும்பம் திருச்சிக்குக் குடியேறியது. நாலைந்து பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தார் ராமலிங்கம். வீட்டில் காலைவேளையில் இட்டிலி வியாபாரம் நடந்தது. மேலைச் சிந்தாமணியில் ஏழைகள் வசிக்கும் அந்தப் பகுதியில் அவர்கள் வாழத் தொடங்கினர்கள். ரத்தினசாமியின் தங்கையும் ஓடிஓடி

வீட்டு வேலைகள் செய்தாள். பொதுவாக ராமலிங்கத்தைத் தவிர மற்ற மூவரும் அங்கு ஓய்வற்ற யந்திரமாய் உழைத்தார்கள். அவன் மட்டும் உல்லாசப் பட்டணத்தின் உயர்வான ராஜா! உழைக்காத இளவரசு!

உணவோ ஓய்வோ இல்லாமல் உழைத்துத் தேய மனித உடல் என்ன, இரும்பால் அடித்ததா? அதிலும் ராமலிங்கம் பத்து வருஷங்களுக்கு மேலாக வீட்டுச் சாப்பாடே—ஏன், பல சமயங்களில் எந்தச் சாப்பாடுமே கிடைக்காமல் பரந்த உலகில் அலைந்தவர். ஒருநாள் இருந்தாற்போலிருந்து திண்ணையில் எழுந்திருக்க முடியாமல் படுத்துவிட்டார். படிப்பு ரத்தினசாமிக்குப் பாதியிலிருந்த சமயம் அது. மூன்று மாதங்கள் அதே திண்ணையில் கிடந்து அணுஅணுவாகத் தம்மைக் காலதேவன் கையில் கொடுத்துவிட்டார். அந்த மூன்று மாதங்களில் ஒருநாள்கூட அவருக்குத் தம்முடைய மகனின் அநுதாபம் கிடைக்கவில்லை.

கடைசியாகக் கண்ணை மூடுவதற்கு முன்பு ரத்தினசாமியை அழைத்து வைத்துக்கொண்டு கூறினர்: "தம்பி! நீ நல்லவனாகத்தான் வாழப்போகிருய். —அதில் எனக்குச் சந்தேகமேயில்லை. என்னுடைய ரத்தத்தில் பிறந்தவனல்லவா நீ? நான் உனக்குச் செல்லம் கொடுத்து வளர்த்துவிட்டேன். நான் போனபிறகுதான் உனக்கு உலகத்தின் உண்மை சரியாகத் தெரியும். உன் குடும்பத்தையும் ஏழைகளையும் எப்போதும் மறந்துவிடாதே!"

## 2

செல்லப் பிள்ளையாகப் பிறந்து செல்லப் பிள்ளையாக வளர்ந்த ரத்தினசாமிக்கு அவன் தந்தை இறந்த பிறகுதான் உண்மையான உலகம் தெரியத் தொடங்கியது.

பருவம் வந்த தங்கை, தள்ளாத வயதுத் தாய், பாதியில் நிற்கும் படிப்பு இவ்வளவும் ஒன்ருய் அவன் கவனிக்க வேண்டி இருந்தது. குடும்பச் சுமை அவனை நிமிரவிடாமல்

தோளில் அழுத்திற்று. தகப்பனுர் இருக்கும் வரையில் ஒரு கஷ்டம்கூட அவனுக்குத் தெரியவில்லையே! எப்படி அவரால் இந்தத் துன்பச் சுமையோடு அவனிடம் சிரித்துப் பேசமுடிந்தது? எப்படி அவனுக்கு வேண்டிய சௌகர்யங்களை முகங் கோணுமல் செய்துகொடுக்க முடிந்தது? —அப்பா!

ஐந்தே வருஷங்கள்தான் அவன் கஷ்டப்பட்ட காலம். ஐந்து வருஷங்களா அவை!

ரத்தினசாமி ஒருவேளைச் சோற்றுக்குத் திண்டாடினுன்; நாலுமுழத் துணிக்குத் திண்டாடினுன்; நாலடி இடத்திற்குத் திண்டாடினுன். பாழும் பசி வந்து குடலை முறுக்கும்போது அவனுக்குத் தன்னைச் சுற்றியுள்ள ஆயிரம் ஆயிரம் பசித்த வயிறுகளின் நினைவு வந்தது. வேஷ்டியின் கிழிசல்களை அவன் தங்கை ஒட்டுப்போடும்போது, தெருவில் கோவணமற்றுத் திரியும் எண்ணற்ற அனுதைக் குழந்தைகள் கண்முன்னே வந்தார்கள். கூரைக் குடிசைக்கு வாடகை கொடுக்கமுடியாமல் அவன் தவித்தபோதுதான், சாக்கடையருகே படுத்துறங்கும் பஞ்சைகளின் பரிதாப வாழ்வை அவனுல் எண்ணமுடிந்தது.

ரத்தினசாமி சிந்தித்தான். தன்னுடைய கஷ்டம் அவனுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. அப்பாவும் இப்படித்தானே கஷ்டப்பட்டிருப்பார்? 'அப்பா! அந்த மூன்று ரூபாய் அனுப்புவதற்கு எத்தனை சிரமப்பட்டீர்களோ! எத்தனை நாள் பட்டினி கிடந்தீர்களோ! உங்களைப்போல் இன்னும் எத்தனை எத்தனை அப்பாக்கள் தங்கள் குடும்பங்களைக் காக்க இங்கே ஆலாய்ப் பறக்கிறுர்களோ!'

அப்பாவின் ஒரே ஒரு லட்சியம் தம் மகனின் வாழ்வுதான்! அதைக்கூட இந்தச் சமுதாய அமைப்பில் அவரால் சாதிக்க முடியவில்லை. முன்பு அவரைப் புரிந்துகொள்ளாமல் அலட்சியம் செய்து அடிமைபோல் நடத்தியதற்காகக் கதறிக் கண்ணீர் வடித்திருக்கிறுன். எல்லாவற்றுக்கும் காரணம் ஏழைமைதானே? அதை அவனுல் மன்னிக்க முடியாது.

அப்போதெல்லாம் தன்னுடைய தந்தையின் கடைசிக் குரல் காதில் விழுவதை அவன் உற்றுக் கேட்டான்:

“என்னுடைய ரத்தத்தில் பிறந்தவனல்லவா நீ? உன் குடும்பத்தையும் ஏழைகளையும் மறந்துவிடாதே!”

படிப்பு முடிந்து கல்லூரியில் ஆசிரியராய்ச் சேர்ந்த பிறகு முதலில் தங்கையின் கல்யாணம் முடிந்தது. வாழ்க்கைநிலை ஓரளவுக்கு வந்தவுடன் தாமும் மணம் செய்துகொண்டார். ஆனால் ஏழைகளுக்கு இரங்கும் நிலை போகவில்லை.

கையை நீட்டியவர்களுக்கெல்லாம் காசு கொடுத்தார். பிச்சைக்காரர் கூட்டம் அவர் வீட்டு முன்பு கூடியது. உடுத்தும் உடையும் உண்ணும் உணவும் அவருக்கே போதவில்லை. சம்பாதித்தும் அவர் ஏழையாகிக்கொண்டு வந்ததுதான் மிச்சம். யாருக்கு உதவினரோ அவர்களுக்கும் அதனால் பயனில்லை.

வீட்டில் மனைவி முணுமுணுத்தாள். தாயார் எச்சரித்தாள். “இப்படிக் கொடுத்துக் கொடுத்துத்தான் உன் அப்பா ஒரு பிள்ளையை வளர்க்க வழியில்லாமல் கடைசியில் திண்டாடினர்” என்றாள். ரத்தினசாமி அவர்கள் மீது சீறி விழுந்தார். இந்நிலையில் அவருக்கு ராமலிங்கம் பிறந்தான்.

சிந்தித்துச் சிந்தித்துப் புதிய சமூக அமைப்பின் வழிகளைப் புத்தகங்களாக எழுதினர். தம்மிடம் படிக்கும் மாணவர்களின் உள்ளங்களில் உண்மையைப் பதிய வைத்தார். முக்கியமான இடங்களில் மாத்திரம் பயனுள்ள பேச்சைப் பேசினர்.

ஊர் சமீபித்துவிட்டது. நினைவிலிருந்து விழித்துக் கொண்ட ரத்தினசாமி தம்முடைய பையனைத் தூக்கிக் கொண்டு அவனுடைய காதருகே மெதுவாய்ச் சொன்னர்:

"ராமலிங்கம்! நான் செல்லமாய் வளர்ந்து ஊருக்கு அதிகமாய் உதவ முடியாதவனாகிவிட்டேன். அவருடைய ரத்தம் உன்னிடமும் ஓடுகிறதடா! உன் காலத்தில் இங்கே சோறில்லாமல், துணியில்லாமல், வீடில்லாமல் ஒருவர் கூட இருக்கக்கூடாது. நீ உன் வாழ்வை இதற்காகக் கொடுக்கவேண்டும்! தெரிகிறதா?"

பையனுக்கு ஒன்றும் விளங்கியிருக்காது. ஆனாலும் அவன் சும்மா இருக்கவில்லை.

"ஓ! சரி அப்பா!" என்றான்.